# ஒருதுறைக் கோவை

# இரண்டு

பதிப்பாசிரியர்கள்

புலவர் பேராசிரியர் ம.வே. பசுபதி, எம். ஏ.,
புலவர் ஞா. மேகலா, எம். ஏ., எம். பில்.,
எஸ். சாமிராமன்

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
2, அருண்டேல் கடற்கரைச் சாலை
பெசன்த் நகர், சென்னை 600 090.

2003

# ஒருதுறைக் கோவை - இரண்டு)

பதிப்பாசிரியர்கள்

புலவர் பேராசிரியர் ம.வே. பசுபதி, எம்.ஏ.,

புலவர் ஞா. மேகலா, எம்.ஏ., எம்.பில்.,

எஸ். சாயிராமன்

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்

2, அருண்டேல் கடற்கரைச் சாலை

பெசன்த் நகர், சென்னை 600 090

2003

# பதிப்புரை

ஒருவனும் ஒருத்தியும் ஒத்த அன்பு கொள்வது திருவருட் சக்தியின் உத்தரவினால் நிகழ்வது. அந்நிகழ்வை அதன் படி நிலைகளைப் பல்வேறு கோணங்களில் சொல்லும் இலக்கியம் 'கோவை' எனப் பெறும். 'காட்சி' முதலாக 400 துறைகளால் - 400 பாடல்களால் செய்யப் பெறுவது கோவை இலக்கியம் ஆகும். 'யாவையும் பாடிக் கோவை பாடுக' எனக் கவிஞர்களுக்கு உத்தர விடும் பழமொழி ஒன்று உண்டு.

தமிழில் 'திருக்கோவையார்' எனப் பெறும் 'திருச்சிற்றம் பலக் கோவையார்' மூத்த கோவை இலக்கியம் ஆகும். அது சைவத் திருமுறைகளுள் எட்டாம் திருமுறையில் அடக்கப் பெற் றுள்ளது. 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' எனச் சிவ பெருமானே மாணிக்கவாசகரைக் கேட்டுப் பெற்ற இலக்கியம் அது என்பர். அந்நூல் 'திருச்சிற்றம்பலம் உடையார்' என்பவர் பாடினார் என்றும் சிலர் சொல்வர்.

கோவை இலக்கிய வளர்ச்சியின் வடிவம் 'ஒரு துறைக் கோவை' எனலாம். கற்பனைத் திறத்தின் உச்சியைத் தொட்ட வர்களே ஒரு துறைக் கோவை பாட முடியும் என்றால் அது மிகையாகாது.

'நாணிக் கண் புதைத்தல்' என்ற ஒரு துறைக் கோவை புலவர்கள் அறிந்ததாகும். தலைவி - காதலி - நாணத்தினால் கண்களைத் தன் கரங்களால் பொத்திக் கொள்கிறாள். அதை வர்ணித்துக் கற்பனை செய்து 400 பாட்டுப் பாடுவதென்றால் அந்தப் புலமையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

ஓலையில் இருந்து முதன்முதலாக மேலும் இரண்டு 'ஒரு துறைக் கோவை நூல்கள்' இந்தத் தொகுப்பில் வெளிவந்துள்ளன.
1. குளந்தை சசிவர்ணன் ஒரு துறைக் கோவை. இது வண்டோச்சி மருங்கணைதல் என்ற ஒரு துறையில் 400 பாடல்களைக் கொண்டது.

காதலியின் கூந்தலில் வண்டு மொய்க்கிறது. இதைக் காதலன், அவளைத் தொடுவதற்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்கிறான். வண்டை ஓச்சுகிறான்; விரட்டுகிறான். அந்தச் சாக்கில் கையை வீசும்போது அவள்மேல் கை படுகிறது. தானாக அல்ல; வேண்டுமென்றே. அவள் அவனைக் காமுகன் என்று நினைக்கக் கூடாது என்பதற்காக வண்டைப் பார்த்துக் கற்பனை யாகப் பேசுகிறான். நானூறு கற்பனைகள் வருகின்றன. திருக் குறள் செய்திகள் (பா 65,171,252,347) செய்யுள் வகைகள் இராகங்கள் (61). இப்படி எத்தனை எத்தனை உண்டோ அவை யெல்லாம் வண்டினிடத்தில் சொல்கிறான். உள்ளம் கவர்ந்த வளைக் கண்டால் கள்ளங் கபடமில்லாமல் புலமை பீறிட்டு வரும் என்பதை இந்நூலால் நன்கு அறியலாம். இந்நூலை இயற்றி யவர் மருதநாயகப் புலவர். இவர் பல பட்டடைச் சொக்கநாதப் புலவரின் இரண்டாம் மகன் ஆவார். இதனைக் காளிமுத்துக் கவிராயர் இயற்றினார் என்றும் கூறுவர்.

௨. திருவாரூர் வெறி விலக்கல் ஒருதுறைக் கோவை. காதல் புகுந்த மனம் வேதனை புகுந்த மனம். அது பல அவஸ்தை களைக் கொடுக்கும். அதனால் செயல்கள் வேறுபடும்; இயக்கம் மாறுபடும். இதெல்லாம் உற்றார் உறவினரைச் சந்தேகப்பட வைக்கும். அதனால் பெற்றோர் கவலை கொள்வார்கள். இந்த வகையில் பெண்ணைப் பெற்றோர் - தலைவியின் பெற்றோர் மிகவும் கவலை கொள்வார்கள். மகளின் மாறுபட்ட நிலைக்குக் காரணம் அறிய வேலனை அழைத்து, 'வெறியாட்டு' என்ற பூஜை நிகழ்ச்சியைச் செய்து அவனுக்கு ஆவேசம் வந்தவுடன் குறி கேட்டு உண்மையை அறிய விரும்புவார்கள். எனவே, அதைத் தடுக்க வேண்டிய கட்டாயம் தலைவிக்கும், தோழிக்கும் ஏற்படும். அப்படித் தடுக்கச் சொல்லுதலை 'வெறி விலக்கல்' என்பார்கள். இந்த ஒரு செய்திக்கு 395 கற்பனைகள் அடங்கியது திருவாரூர் வெறி விலக்கல் ஒரு துறைக் கோவை. இதனை இயற்றியவர் கீழ் வேளூர்க் குருசாமி தேசிகர் ஆவார். இவர் கீழ்வேளூர் சுப்பிர மணிய தேசிகருடைய தந்தை ஆவார். இந்நூல் மட்டுமன்றி பல்லக்கு நாடகம், நாகப்பட்டினப் புராணம் முதலிய நூல்களையும் கீழ்வேளூர்க் குருசாமி தேசிகர் இயற்றினார் என டாக்டர் உ.வே.சா. குறிப்பிட்டார்கள்.

ஓலைச் சுவடியில் உள்ளவாறே பிரதி செய்த நிலையில் இவை பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பிரித்தெழுதிக் குறிப்புரை முதலியவை செய்து பதிப்பிக்கத் திருவருட் சக்தி துணை நிற்குமாக.

பெரும்பாலுமாகக் கட்டளைக் கலித்துறை இலக்கணத்திற் கேற்பச் சீர்கள் அமைக்கப் பெற்றுள்ளன. 795 கட்டளைக் கலித் துறைகளில் சற்றொப்ப 100 செய்யுட்கள் சொற்களாகத் தரப் பெற் றுள்ளன. எப்படியும் அச்சிலேற்றித் தமிழுலகிற்குத் தர வேண்டும் என்ற விழைவே ஒரு விரைவைத் தந்தது. அந்த விரைவே மேலும் சில செப்பங்கள் செய்யத் தடையாயிற்று எனலாம். தமிழ்ச் சான்றோர் தக்கவாறு அறிந்து கற்றுப் போற்ற வேண்டும் எனப் பராசக்தியை இறைஞ்சுகிறேன்.

டாக்டர் உ.வே.சா. அவர்களின் பதிப்புப் பணி, அதே பாணியில் இந்நூல் நிலையம் வாயிலாக, அவர்தம் திருமகனார் திரு. சா. கல்யாண சுந்தரம் ஐயர் அவர்களாலும், டாக்டர் உ.வே.சா. அவர்களின் பெயரனார் திரு. க. சுப்பிரமணிய ஐயர் அவர்களாலும், தொடர்ந்த நிலைமை தற்போதுஂ டாக்டர் உ.வே.சா. அவர்களின் கொள்ளுப் பெயரனார் திரு. சு. வேங்கட கிருஷ்ணன் அவர்களாலும் தொடர்வது மிக்க மகிழ்ச்சிக்குரிய தாகும்.

கற்பனை நயங்களைத் துய்க்கவல்ல சான்றோர்களுக்கும், இலக்கியத் திறனாய்வாளர்களுக்கும் இவ்விரண்டு ஒரு துறைக் கோவை நூல்களும் சாலப் பயன் தரும் என்பதில் ஐயமில்லை.

டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம் — **ம.வே. பசுபதி**
சென்னை 90 — காப்பாட்சியர்

# பொருளடக்கம்

# சசிவர்ணன் ஒருதுறைக் கோவை

## *வண்டோச்சி மருங்கணைதல்*

நீர்கொண்ட மேகநிறங் கொண்ட மாலென நீதிகொண்டு
பார்கொண்ட கீர்த்திச் சசிவர்ண ராசன் பயில்குளந்தைச்
சீர்கொண்ட வண்டினங் காணடுநீதி தெரிந்திருந்து
மேர்கொண்ட மின்மலர்க் கூந்தலின் மேவி யிருக்கை நன்றே. 1

பாகத்தனை மொழி யார்விழி நீலம் பரப்பும் வச்ர
தேகத்த னாகுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
பூகத் தடவி வரிவண்டு காளெவர் போதனைகாண்
மேகத் திடைநட்பு மின்னிடை யேபகை மேவுதற்கே. 2

இடியிற் குமுறொலி மால்யானை வேந்த னெதிர்த்தவரை
யடியிற் படியவைத் தோன்சசி வர்ண னருள்குளந்தைப்
பிடியைப் பிடிநடை யாள்குழற் பின்னலிற் பின்னளிகான
டுடியைத் துடியெனச் செய்தீ ரிதென்ன துடியுமக்கே. 3

சோகா குலம் வருத்தாமே புலவர்கள் சூழவளர்
மாகா திபனை நிகராஞ் சசிவர்ண மால்குளந்தைப்
பாகாய் தேன்குழல் வண்டீ ரிடைகண்டு பாண்டியன்போன்
மேகா டவியை விலங்கிடில் யானும்மை மெச்சுவனே. 4

தென்வரு பூசக்ர கேயூர ராச சிகாமணியாம்
பொன்வரு மார்பன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
மின்வரு கூந்தல் வரிவண்டு காள்சொல்லு வேன்முருகன்
முன்வரு தும்பி யெனவோகொம் பொன்றை முறிக்கின்றதே. 5

அடும்பகை கொண்ட லொருமா விருபிள வாய்ப்பிளக்கத்
தொடும்படை வேள்சசி வர்ணன் குளந்தைச் சுரும்பிளங்கா
ளிடும்பல பூண்முலைப் பாரம் பொறாம லிளைத்தவர்மேற்
கொடும்பகை செய்யத் தொடுத்தீர் மிகவுங் குடிலமுற்றே. 6

நம்பும் புலவர் புலவோர்க் கரசினு நான்மடங்காங்
கும்பன் சசிவர்ண ராசன் குளந்தைக் குளிர்வரைக்கே
கம்பந் தவிரளி காளள காபுரங் காவல்கொண்டீர்
செம்பொன் பணவிடை தான்குறைந் தாலுந் திருட்டுமக்கே. 7

வாழை கரும்பு பலாமா வுலாவு மடலவிழ்ந்த
தாழை விளங்குங் குளந்தைச் சசிவர்ணன் சாரலுறா
வேழையர் தங்க ளியல்பாய்ச்செந் தேனிவ் விடைகவிழ்த்துக்
கூழை விரும்பிக் களிவண்டு காள்குடி கொள்வதன்றே. 8

நண்ணிய கீர்த்திச் சசிவர்ண ராச னவில்குளந்தைக்
கண்ணியை மேவிக் குழல்வா யிசைகொள் களிவண்டுகாள்
வண்ணவெண் பாற்குடந் தோய்வது கண்டுமம் மாபெரியோ
ரெண்ணுவ ரோநல் லிடைக்குலந் தேய்ந்திட ரெய்துதற்கே. 9

சேலையங் கார்திரை வேலைக்குள் சூருக்குந் திண்சிரிக்கும்
வேலையங் கார் விடுத்தோன் சசிவர்ண வேள்குளந்தைச்
சோலையங் கார்குழல் வண்டீர் தனத்திடை சோர்வுகண்டு
மாலையங் காட்டி முடிச்சவிழ்த் தீருயிர் வாழ்வதற்கே. 10

சல்லாப மாரன் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தைச்
செல்லாருஞ் சோலை வரிவண்டு காளென்ன செய்து கொண்டீர்
வல்லார் தனத்திற் பெருந்தோருற் றாரு மருங்கிருக்க
வல்லா ரிடங்களிற் சம்பந்தஞ் செய்வ தழகல்லவே. 11

மன்னியர் மன்னன் சசிவர்ண ராசன் வளர்குளந்தை
மின்னிய கும்பஞ்செவ் வாய்தனு ராகுவு மீனமுமே
யுன்னிய நோக்கமு மாட்சியு மாகியுயர் சிங்கமேற்
கன்னியி னுச்சி யளிகா ளுமக்கேன் கடும்பகையே. 12

பூவலர் மார்பன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
மாவலர் கூந்தல் வரிவண்டு காள்வரு மோவுரையீர்
காவலர் காரிகை நன்னூ லிடைச்சொல் கருதலின்றிப்
பாவலர் கூட்டத்தி னேடவிழ்த் தேயிசை பாடுதற்கே. 13

தருகவி போற்றுஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
முருகுயர் சோலையிற் செந்தே னடிக்கடி மொண்டு வண்டீர்
பருகிலி ரிவ்விடை கண்டுநன் றோபத மாறுகொண்டு
கருகிய தேன்குழ லாசைவைத் தீரென்ன காரணமே. 14

பாவேந்தர் வெங்கலி யார்கலி நீங்கப் பரிந்துதவும்
பூவேந்தர் வேந்தன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
மாவேந்து கூந்தல்வண் டீருயர் வானிம் மருங்குறநீர்
தேவேந் திரனென்ன வோமேக வாகனஞ் சேர்ந்ததுவே. 15

கோது நடந்தகல் பூங்கொடி யார்க்குங் குளிர்ந்தபதப்
போது நடந்த குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பிற்
காது நடந்த விழியா ளிடைவிட்டுக் கங்குலிலே
தூது நடந்தநீர் வண்டீ ரரனென்று சொல்லுதற்கே. 16

காருஞ் சுரபியுஞ் சிந்தா மணியுநற் கற்பகப்பூந்
தாருவு மான சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
சேருங் கருவண்டு காள்வஞ்சி யார்க்கிடர் செய்துகண்டோ
ராரும் பழிக்கப் பரியாசமுஞ் செய்ய லாவதன்றே. 17

அங்கத்தர் சீனர் மராடர் விராட ரடர்கலிங்கர்
வங்கத்தர் போற்றுஞ் சசிவர்ண ராசன் வளர்குளந்தைத்
தங்கத் திருவனை யார்குழற் கானகஞ் சார்புகொண்டே
சிங்கத் துடனரி காளெதிர்ந் தேபகை செய்வதன்றே. 18

செந்தமி ழந்தணர் யாசக ருற்றவர் தேசிகர்க்கு
மைந்தரு வாகுஞ் சசிவர்ண பூப னருள்குளந்தை
மந்தர மத்திமந் தான்பொருந் தாத மலர் வண்டுகாள்
சந்ததந் தாரகஞ் சேர்குழல் கூடத் தகாதுமக்கே. 19

பாரின் விளையும் புகழ்வல்லி சாதம் படர்ந்தமர
ரூரின் விளைய வைத்தோன் சசிவர்ண னுயிர்குளந்தைச்
சீரின் விளைமணிப் பூண்முலை யாள்குழல் சேர்வண்டுகாள்
காரின் விளைவுகண் டோவிடை கோடையைக் கைவிட்டதே. 20

வெல்லும் படையயில் வேலுந் திருவும் விரைந்தளவு
மல்லும் பழகும் புயன்சசி வர்ணன் வளர்குளந்தை
யெல்லும் பணியுங் குழல் வண்டு காள்சிற் றிடையிங்ஙனே
சொல்லும் பழியறிந் தோகொண்டை தானலர் தூற்றுவதே. 21

விரிநீ ருலகு புரந்தரன் சீதரன் மெய்மநு நூல்
தெரிநீர் மையான் சசிவர்ணன் குளந்தைச் சிலம்பிடத்தில்
வரிநீ டிணைவிழி மானனை யாள்குழல் வாழ்வண்டுகா
ளரிநீர் துகிலென்று நூலொழித் தாற்குற்ற மாமுமக்கே. 22

காவே சுரபிசிந் தாமணி யேயென்று கற்றவர்நன்
னாவே துதிக்குஞ் சசிவர்ண ராச னவில்குளந்தைப்
பூவே தருமொரு மாவிடை யன்றியப் பூங்குயின்மேன்
மாவே யிருப்பதுண் டோவண்டு காளென்னன மாயமிதே. 23

சேனும் புவியுந் துதிக்குஞ் சசிவர்ண தீரனன்பு
பூணுங் குளந்தை யளிகாணம் முக்கட் புனிதர்தந்த
கோணும் பிறையுந் திருமானுங் கொண்டவள் கூந்தலுக்கு
நாணுங் கணையும் பறிகொடுத் தோமத னாணுவதே. 24

நானீ யெனப்புவி ராசர்மிஞ் சாம னடத்தியசெங்
கோனீர் மைகொண்ட சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
றேனீயென் றேசொல்லும் வண்டினங் காளிவள் சிற்றிடையின்
பானீர் வெறுத்துயர் கானலைத் தேடிய பண்பு நன்றே. 25

வெல்லிக் குமாரன் சசிவர்ண ராசன் வியன்குளந்தை
புல்லிக் கொள்பூ வையகலா தெப்போதும் பொருந்துநறை
யல்லிற் பொலிந்தள காடவி வாழு மளியினங்காள்
வல்லிக் கொடிக்கு முமக்குமென் னோபகை வந்ததுவே. 26

மற்றே றியபுய வீரருஞ் செஞ்சியர் வஞ்சியருங்
குற்றேவல் செய்யுஞ் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பி
லுற்றேறிய குழல்வண் டீர்மருங்கு லொடியில் விஞ்சை
சற்றே நிறுத்தவுங் கற்றதுண் டோமுலை தாங்குதற்கே. 27

சக்கர பாணி சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
மைக்கருங் கூந்தல் வரிவண்டு காண்மலை போற்குவிந்த
மிக்க தனஞ்சுமை யாய்வைத் திருந்து மெலிந்தறவே
யொக்கலை வாட்டி வருத்துவ ரோசொல்லு முத்தமரே. 28

அலைக்குங் குறும்பறை வெங்கால னூர்விருந் தாகச் செய்யுஞ்
சிலைக்கொண்ட லாகுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
னிலைக்குங் கருவண்டு காளயன் போலெண்ணி நீங்களெண்ணென்
கலைக்கொம் பினைவிடுத் தோகம லாசனங் கைக்கொள்வதே. 29

வடிதமிழ் மாலைப் புயாசலத் தேகதிர் வாளமைக்கும்
படிபுகழ் கீர்த்தி சசிவர்ண ராசன் பயில்குளந்தைக்
கடிமண மங்கள காரியத் தேசெல் களி வண்டுகாள்
கொடிவல மாகிலன் றோகைக்கு மேற்பலங் கூடுவதே. 30

வயற்கண் கமலத்துஞ் சங்கத்து முத்தமிழ் வாழ்மதுரைக்
கயற்கண் கொடியைத் தொழுமால் சசிவர்ணன் கைம்மலர்போ
லியற்கொண்டல் சூழுங் குளந்தையன் னாள்குழ லேறிவண்டீர்
முயற்கொம் பொருசிற் றிடைக்கொம் பெனச்செயு மொய்ம்பு நன்றே. 31

காரிய காரணம் போலேழ் புவிகளுங் காத்தருளுஞ்
சூரிய னான குளந்தைச் சசிவர்ண துங்கனைவெற்பிற்
பேரியல் வண்டினங் காளிவள் கூந்தலிற் பெய்தமலர்
மாரியின் மூழ்கிநின் றீரொரு பூங்கொடி வாடுதற்கே. 32

செல்லொத் தருளுஞ் சசிவர்ண ராசன் றிகழ்குளந்தை
மல்லொத்த வெற்பி லருங்கொடி யாடிய மாளிகைவிட்
டல்லொத்த மேனி யளிகா ணெருங்கு மடையலர்தம்
மில்லொத்து வாழ்வது போகாது காணுமக் கென்றைக்குமே. 33

தேசலர் கீர்த்திச் சசிவர்ண ராசன் றிகழ்குளந்தைக்
கேசர மேயுயர் சொர்க்காதி போகமுங் கீழ்ப்படுத்தி
நேசம தாகு மரம்பையின் னாரையு நீக்கிவிட்டீர்
வாசவன் மேலன்பு வைத்தீர் வெறிகொண்ட வாறுநன்றே. 34

இந்திரன் போற்றருப் போற்கதிர் போலவெண் ணெண்கலைசேர்
சந்திரன் போற்சசி வர்ணன் குளந்தையிற் றண்ணளிகாண்
மந்தர மாமுலை நூலிடை பார்த்து மலர்க்குழன்மே
லுந்திர மாக விருந்தீர்வெங் காவலுண் டாமுமக்கே. 35

முந்திய லோர்க்குக் கவிகை சிவிகை முதற்பரியுந்
தந்தியு நல்குஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தைக்
கொந்தியல் சேரு மளிகா ளிவண்மலர்க் கூந்தலிலே
சிந்திய கள்ளுண் ணவோவிடுத் தீர்மத்ய தேசத்தையே. 36

தருமாரி பாரி சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தைத்
திருமா னளகம் பயில்வண்டு காள்செயத் தக்கதன்றே
வருமா நிலம்பணி காஞ்சி புரத்திடை வாய்ப்பதன்றிக்
கருமாரிப் பாய்ச்சல் கமலா லயமிசை காட்டுவதே. 37

பூப்பிள்ளை நாமகள் வாழ்சசி வர்ணன் புகழ்க்குளந்தைக்
கோப்புள்ள கூந்தல் வரிவண்டு காண்மணக் கோலத்திடை
காப்புள்ள மங்கல சூத்திரந் தான்கரு தாமலென்னோ
மாப்பிள்ளை யாக விறுமாந் திருக்க மதிக்கின்றதே. 38

அங்காள வானமெல் லாஞ்சிவப் பேற வணிபெருகுஞ்
செங்கா வியங்குடை யான்சசி வர்ணன் திகழ்குளந்தைக்
கொங்கார் குழலில் வரிவண்டு காள்கொண்ட கோலநன்றே
கங்கா தரனென்ன வேபகைத் தீர்வருங் காலரையே. 39

மருப்பூர் பொருப்பன் சசிவர்ண ராசன் வளர்குளந்தைக்
கருப்பூர் புருவக் கனியிதழ்க் கொம்மைக் கனதனத்தாள்
விருப்பூர் குழலி லளிகா ளழகிய மின்னைவிட்டுத்
திருப்பூ வணவற் கிதமா யிருப்பது செவ்வையன்றே. 40

பொருங்குழல் வேழமும் பாய்மாவு மூரும் புலவர்க்கென்றுந்
தருங்குளந் தைச்சசி வர்ண மகிபன் றடஞ்சிலம்பின்
மருங்குறுஞ் சின்னம் பெறுதுடி யார்த்திட வண்டினங்காள்
கருங்குழ லூதிக்கொண் டோடிவந் தீரடுங் காவலுக்கே. 41

தேசம் புகழ்குளந் தைச்சசி வர்ணனைச் சேரலர்போ
லேசங்கை நூலுற் றவரை நிறுத்தி யிசைவண்டுகா
ணேசந் தரவுயர் பைந்தார்ச் செழியன்மு னின்றியற்கை
வாசந் தெரிந்து சொலவோ குழன்மிசை வந்ததுவே. 42

கும்பா சலேசன் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
வெம்பா திருக்கு மளிகா ணடுப்பற்றை விட்டிகழ்ந்தே
வம்பா னதொன்று மிருமண மூன்றும்வண் டேனதனா
லைம்பா னிலத்தி லறுதாள் விளைவிப்ப தாவதன்றே. 43

கக்குங் கனல்விழி நாகத்தி னுங்கரு தார்சிரத்தும்
வைக்கும் பதாம்புயன் றென்குளந் தைச்சசி வர்ணன்வெற்பிற்
றைக்குஞ்ச ரமத வேண்மன் னவரைத் தணந்தல்லவோ
சிக்குஞ் சிறையுமுற்றீர் வண்டுகாள் கொண்டை சேர்ந்திருந்தே. 44

சேடனை நிபணி யென்போ னறிவிற்றென் றேவையரன்
றாடனைப் போற்றுஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
நாடனை யாள்குழன் மேல்வண்டு காணைந்து நைந்துரு*(க்)*கும்
வேடனைக் காக்கிற் பழிக்கஞ்சி யென்றும்மை வேண்டுவனே. 45

வணக்கமு நட்பு மனுகூ லமுஞ்சொலும் வாய்மையுஞ்சேர்
குணக்கடல் கீர்த்திச் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பி
லிணக்கரைக் காணி யுணர்ந்தீ நிலைக்குழ லேறும்வண்டீர்
கணக்கதி கார முமக்கே ளினிவிடுங் கையிகழ்ந்தே. 46

சேப்பணி சோரி தருவே லபயன் றிகழ்குளந்தை
மாப்பணி மார்பன் சசிவர்ண ராசன் மகிழ்வரைவாய்
காப்பணிப் பூப்பந் தமர்குழல் வாழுங் கருவண்டுகா
ணாப்பணில் லாமல் வரியிசை பாடுத னன்றல்லவே. 47

ஒள்ளிய பூதல மீதல மண்டமு மூடுருவி
பள்ளிய கீர்த்தி சசிவர்ண ராச னருள்குளந்தை
வள்ளியை யன்றி முருகற்குண் டோசொல்லும் வண்டினங்கா
டெள்ளிய மாவு நறுந்தேனு முண்டு தெவிட்டுவதே. 48

பைபிடி வாழர விற்றுயின் றோன்பண் பயில்குளந்தை
நெய்பிடி வேல்கொள் சசிவர்ண பூபதி நீள்சிலம்பின்
மைபிடி கூந்தலிற் காமர மேறும் வரிவண்டுகாள்
கைபிடி யன்றிநின் றாற்றவ றேவருங் காணுமக்கே. 49

வம்பரை லோபரைக் கானம் புகுதவைத் தோன்குளந்தை
தம்பரை பாலனைப் போற்றுஞ் சசிவர்ண ராசன்வெற்பிற்
கம்பரை யேலயஞ் செய்தோ குழலிற் கருவண்டுகா
ளும்பரை மேவு மொருகாள மேகத் துலாக்கொள்வதே. 50

கோநூறு நூறொல் வொருமறை யோற்குநல் குங்குளந்தை
மானூர் விழிச்சியர் வேள்சசி வர்ண மகீபன்வெற்பிற்
கானூர் கொடிமங் கலம்விடுத் தேவண்டு காளடுத்த
தேனூர்நற் சோலை குறிச்சியி லேபட்சஞ் செய்வதன்றே. 51

தூதை விரும்பிமுன் னூற்றுவர் பாற்சென்ற தோன்றன்மலர்
மாதை மணந்த குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பி
லேதை நினைந்தமு தாங்கனி யின்னிடை யேவெறுத்துக்
கோதை விரும்பிக் களிவண்டு காளன்பு கொண்டதுவே. 52

மண்ணுல கேழும் விசும்பேழும் வண்புக ழாநிலவு
நண்ணுபொன் மேரு சசிவர்ண ராசன வில்குளந்தை
யெண்ணுமின் மாரிக் குழன்மேற் வளரு மிசைவண்டுகாள்
கண்ணுத லாகநின் றேகாம ராசனைக் காய்தனன்றே. 53

கம்பந் தருகும்ப மால்யானை யான்கலை சேர்மதிய
விம்பந் தருமுக வேள்சசி வர்ணன் வியன்குளந்தை
கும்பந் தருமிரு கொங்கைநல் லார்மலர்க் கூந்தல்வண்டீர்
சம்பந்த ராகி யருகரை யேயிங்கு சாய்த்தனன்றே. 54

விண்காட் டியபுகழ் சேர்சசி வர்ணன் வியன்குளந்தைப்
பண்காட் டியமொழி யாளிடை யேங்கப் பகர்வண்டுகா
ளெண்காட்டு பாதச் சிலம்பார்ப்பக் கூந்தலி லேகுவளைக்
கண்காட்ட முல்லை நகைகாட்ட நீங்கள்க ளுண்பதன்றே. 55

பூவடி வாயங்காங் காட்டிய பூவைப் புனிதரிரு
சேவடி போற்றுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பின்
மாவடி வேந்தி வருகங்கை யாடிய வண்டினங்காள்
காவடி தான்கொண் டிராமலிங் கேசரைக் காண்மின்களே. 56

பூரணி ஞான மனோன்மணி பாதமெப் போதுந்தொழு
மேரணி கொண்ட சசிவர்ண ராச னெழிற்குளந்தை
வாரணி பூண்முலை மின்னாள் குழலில் வரிவண்டுகா
டாரணி தான்கொண்டு மில்லைவைத் தீர்நடுச் சந்தியிலே. 57

திண்பா வலர்புகழ் சேர்தென் குளந்தைத் திருவனையார்
கண்பாவை போலுஞ் சசிவர்ண ராசன் கனகிரிவாய்ப்
பண்பா வியவண்டு காள்கலிப் பாவஞ்சிப் பாவன்றியே
வெண்பாவை யோதி யகவலி லேவிருப் பாவதன்றே. 58

இலங்கப் புகுமடல் கோவைநல் லார மிசைமணிப்பூ
ணலங்கற் புயள்குளந் தைச்சசி வர்ண னவனியெல்லாந்
துல்ங்கப் பரணிகொள் வானென வோவெறி தோய்தும்பிகாள்
கலிங்கத் தவரை விடுத்தே மராட்டரை கைக்கொண்டதே. 59

நாலா றுடனெட் டறம்வழு வாது நடத்தியசெங்
கோலாறு கண்ட சசிவர்ண ராசன் குளந்தைவெற்பி
னூலாறு கண்ட நடுவூர் மெலிய நுவல்வண்டுகாள்
காலாறு கானிற் பெருக்குவ ரோவெந்த காலத்துமே. 60

பாரெங்கும் போற்றுஞ் சசிவர்ண ராசன் பயில்குளந்தை
யூரங் குலாவும்வண் டீர்கனம் பாடவொண் ணாதுகண்டீர்
சாரங்க மோகன கல்யாணி மத்திமந் தான்விடுத்தே
யேரங்க மேவிய காந்தார மொன்றி லிசைந்து நின்றே. 61

நில்லென்று சூர்ப்ப ணகிமூக் கரிந்துநின் முன்னவர்க்குச்
சொல்லென்ற ராமன் குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பி
லல்லென்ற கூந்தல்வண் டீரர னேற்றது மன்றுண்டது*(வு)*ம்
புல்லென் றிடைக்குங் குழற்கும் பொருந்தும் புதுமைநன்றே. 62

கன்றேந்தி வெள்ளிற் கனியுதிர்த் தோன்கஞ்சன் விட்டசக
டன்றேந் தியபதத் தான்சசி வர்ண னருள்குளந்தை
நன்றேந்து கூந்தலந் தேனேகண் டாயில்லை நானென்சொல்கேன்
குன்றேந் தியசெம்பொன் பூணுற்ற மாணிக்கக் கொம்பினையே. 63

இம்பரில் வாழ்இந் திரன்சசி வர்ணனெங் கோன்குளந்தைக்
கொம்பரில் லாதிரு கோங்கலர் மேற்கொண்டன் மண்டலத்தே
வெம்பரி காள்வட்டஞ் செய்துநின் றீர்வெய்ய வன்பரிபோ
லும்பரி லோட்டங்கண் டாலெவர் காணும்மை யொப்பவரே. 64

வில்லாளர் போற்றுஞ் சசிவர்ண ராசன் வியன்குளந்தை
நல்லார் குழலில் வரிவண்டு காணல்ல ஞானமன்றோ
வில்லாரை யெள்ளுவ ரெல்லாருஞ் செல்வரை யேயிகழ்ந்து
சொல்லார் சிறப்புஞ்செய் வாரென வோகொண்டை சூழ்ந்ததுவே. 65

சிந்தா மணியென்ன வேபல கோடி செந்தமிழோர்
வந்தாலு நல்குஞ் சசிவர்ண ராசன் வளர்குளந்தைப்
பந்தார் பயோதர மின்னார் குழலிற் பயில்வண்டுகாள்
தந்தார்க் கிடுக்கண் செய்வாரோ வுயர்ந்த தலைமையரே. 66

வீதியி லேயன்ன மின்னார்பின் செல்லும் வியன்குளந்தை
நீதியி லேமநு வேந்தன் சசிவர்ண னீள்சிலம்பி
லோதியி லேவந்து வண்டினங் காளிங் கொருகரும்பின்
பாதியி லேகசப் புற்றீ ரிதுவென்ன பண்புமக்கே: 67

பார்தாங்கு வென்றிப் புயன்சசி வர்ணன் பகர்குளந்தை
யூர்தாங்கு சோலை யடுத்திசை பாடி யுலாவளிகா
ளோர்தா னிலகு குழன்மே லிருள்வலி யென்றிருந்தே
நீர்தா மரையை வெறுத்தால் வரும்வரு நிந்தனையே. 68

கருமந் தழைத்தன்பு பூத்திகல் காய்த்தரு டான்பழுத்து
வருமந் தரபுயன் றென்குளந் தைச்சசி வர்ணன்வெற்பி
லருமந்த கூந்த லளிகா ளிடையுரு வன்றியுண்டோ
திருமந் திரமறிந் தோதி யிருக்குஞ் செயலுமக்கே. 69

வந்தே தமிழ்புனை வாணர்க் கிருநிதி வாரியள்ளித்
தந்தே வளர்க்குஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தைச்
செந்தேன் குமுதத் திதழிடை நீக்கிச் சிறைவண்டுகா
ளந்தோ கதுப்பினி லாசைவைத் தீர்நல் ததிசயமே. 70

நூலா யுங்கல்வி யறிவ ரகன்கவி ஞோர்புகழும்
வேலா யுதன்சசி வர்ணன் குளந்தையின் வெற்பளிகாள்
சேலார் வியன்மா ரன்மத யானை மேற்சமர் செய்துநின்றீர்
காலா ளிடையின் முறிவது பார்த்திருங் கண்களித்தே. 71

கிரியான தோரெட்டி லொன்றாய்வெண் கோட்டிற் கிளர்மணிக்கிம்
புரியானை வேந்தன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
யரியாய்ப் பிறந்து மருணா சலத்தி னடியன்றியே
தெரியாமை யால்வண்டு காள்முடி தேடித் திரிவதன்றே. 72

நடுக்கண்டு தென்குளந் தைச்சசி வர்ணனை நாடலர்போற்
கடுக்கண் மயிலனை யார்மலர்க் கூந்தற் கருவண்டுகா
ளிடுக்க ணுமக்குற்ற தென்னோ மயல்வெறி யெய்தினர்போ
லுடுக்கை யிழந்துயர் காவினி லோடி யொளிப்பதற்கே. 73

மின்னிய வாகு வலயங்க ளாகவிம் மேதினிதான்
றுன்னிய கீர்த்திச் சசிவர்ண ராசன் றுதிகுளந்தை
மன்னிய சோலை வரிவண்டு காண்மநு நூலன்றியே
சென்னிய ராகிக் கொடுமைசெய் தீரென்ன செய்கையிதே. 74

ஈவதொன் றேயற மெந்நாளு நன்மை யியம்புவதே
நாவதென் றேசொல் சசிவர்ண ராச னவில்குளந்தைக்
காவலென் றேகுழற் கானூரைக் கட்டிக்கொண் டீரளிகா
ளாவதென் றேயிடைக் காட்டுரை நீவி ரழிப்பதுவே. 75

வாளா ளரசர் மணவாளன் மோக வரிசைமின்னார்
வேளாங் குளந்தைச் சசிவர்ண ராசன் வியன்சிலம்பிற்
கோளா றிடையறி யாதே வளர்க்கருங் கூந்தல்வண்டீர்
தாளாறு வந்திடி லுண்டோ தலைபத்துத் தானுமக்கே. 76

நாவேரி யங்கம லாசனத் தான்மெச்சு நல்லதமிழ்ப்
பாவேரி மாலைப் புயன்சசி வர்ணன் பயில்குளந்தைப்
பூவேரி பாய்பொன் னிடையரங் கம்பொருந் தாமன்மிக்க
காவேரி தோய்ந்து வரிவண்டு காளென் களிப்பதுவே. 77

வேலை யடைத்த திருமால் சசிவர்ண வேள்குளந்தைச்
சோலை யடுத்த குழல்வண்டு காளொரு தூரிகைவண்
கோலை யெடுத்து வடிவெழு தாமற் குறித்ததென்னோ
மாலை யடுத்து மடலேறி யேமிக வாடுதற்கே. 78

துன்னலர் நீல மணியாகச் செம்மணி தோற்றுமிரு
நன்னய னாம்புய மால்சசி வர்ண னவில்குளந்தைப்
பொன்னவிர் பூண்முலை யாள்குழன் மீது புகுமளிகாண்
மன்னரை யேபகைத் திப்பூ விருப்பது மார்க்கமன்றே. 79

பொன்மய மார்பன் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பிற்
சொன்மய நாத வடிவாகி மென்குழற் சூழ்வண்டுகாள்
சின்மய மாகிநி ராதார மாய்ச்சச்சி தானந்தமாந்
தன்மய மான பொருளுணர்ந் தீரில்லைத் தாழ்வுமக்கே. 80

தகுதி திகுதி யெனநடித் தேழ்கட றாண்டுபரித்
தொகுதிகொண் டோன்றென் குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பில்
விகுதி யிடைநிலை யில்லாமற் சாரியை மென்குழன்மேற்
பகுதிகொண் டேமுடித் தீர்வண்டு காணற் பதங்களையே. 81

தேர்ந்தார் கலியை மருவிலர் தாம்பெறச் செய்துதன்னைச்
சார்ந்தாரைக் காக்குஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
யார்ந்தார பாரஞ் செயுமளி காள்குழ லாண்மைகொண்டு
நேர்ந்தா ருடன்பகைத் தேனொழித் தீர்நன் னிசியிடத்தே. 82

தருவித் தரணி யிடத்தே கரசர ணாதிகொண்டு
வருவித் தகன்றென் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பிற்
குருவித் தலையிற் பனங்காய் நிறுத்திய கொள்கைகண்டீர்
வெருவித்த சிற்றிடைக் கேவண்டு காள்குழன் மேற்கொண்டதே. 83

நண்ணார் பரவுஞ் சசிவர்ண ராச னவில்குளந்தைப்
பண்ணார் கனிமொழிக் கிஞ்சுகச் செவ்விதழ்ப் பாவையன்னாள்
கண்ணார் வரிவண்டு காள்குழன் மேற்கடு நட்புக்கொண்டே
யொண்ணா திடையின் முறிப்பினை யேசெய்வ துங்களுக்கே. 84

மாநிலத் தேவளர் சிந்தா மணித்தமிழ் வாணர்பெற
நானிலத் தெய்துஞ் சசிவர்ண ராச னவில்குளந்தைக்
கானின்மெய்ப் பான வளியினங் காளென்ன காணிடைக்கே
யானி வைத் தாடிருந்தீர் பைங்கூந்த லரமனைக்கே. 85

தாக்கிய வென்றிச் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தைப்
பாக்கியம் போற்றழைக் குங்குழன் மேற்பண் பயில்வண்டுகா
ணோக்கிய வன்ன வடிவாகி வேத னுவலுமொரு
வாக்கிய மாக்குதற் கோதுணிந் தீர்மின் மருங்குலையே. 86

முத்தான வெண்ணகை யார்நெஞ்சின் மோ.க முளைமுளைக்கும்
வித்தான மாரன் சசிவர்ண ராசன் வியன்குளந்தை
யொத்தான கூந்த லளிகாள்மதுவை யுகந்துநுகர்ந்
தத்தா னுறவுகொண் டம்மான் மகள்பகை யாவதன்றே. 87

வளைத்தருள் பாத்திக ளாயுல கேழினும் வானிலுமே
முளைத்திடுங் கீர்த்திச் சசிவர்ண ராசன் மொழிகுளந்தை
விளைத்தருள் கூந்தல் வரிவண்டு காளென்ன மேற்றரங்கா
ணிளைத்திருந் தோர்தம் மிடையே வருத்தி யிடர்செய்வதே. 88

கடியரண் மாற்றலர் துன்னலர் தூவியெக் காலுநின்றே
யடிதொழு மால்சசி வர்ண மகிப னருள்குளந்தைப்
படிமலர்க் கூந்த லளிகாள்சங் கீதம் பயிறனன்றே
துடிநிமி டத்திற் துரிதமுற் றேலயத் தோன்றிடவே. 89

தருவே சுரபிசிந் தாமணி யேயெனத் தாரணிவா
ழுருவே சசிவர்ண ராசன் குளந்தையி லோங்களிகாள்
வருவரு ரோமா வளியெனுங் காளுந்தி வாழிடந்தான்
றிரிவேணி சங்கமங் கண்டோர்க்கென் னோதெரி யாததுவே. 90

நடைமலை தேர்வென்றி வாம்பரி வீரரிந் நால்வகைசேர்
படைமலி வீரன் சசிவர்ண ராசன் பகர்குளந்தைத்
தொடைமலர்க் கூந்தலிற் கானைப் பதிகொண்டு சூழ்வண்டுகா
ளிடைமரு தூரைச் சிதம்பர மாய்ச்செயு மெண்ணநன்றே. 91

சிலைப்பாரவாகு சசிவர்ண வேடென் குளந்தைவெற்பின்
முலைப்பாரமுங் கொத்து முத்தார பாரமு முத்தரியக்
கலைப்பாரமு மொரு மாபார மோவலக் காணிடைக்கே
தலைப்பாரம் வேண்டுமென் றோவண்டு காள்கொண்டைச் சார்ந்ததுவே. 92

அட்டிவைத் தாணையை மீறிய பேரை யவனிக்கப்பா
லெட்டிவைத் தோன்சசி வர்ணன் குளந்தை யிலங்களிகாள்
சுட்டிவைத் தாடிய வாணுதல் கொண்டைச் சொருக்கைவண்டு
கட்டிவைத் தோடவிட் டீர்நடு வேயென்ன காரணமே. 93

திருவிருந் தோங்கு மணிமுன் றிலான்செஞ்சொல் வாணர்க்கென்றும்
பெருவிருந் தாங்குளந் தைச்சசி வர்ணன் பிறங்கலின்வாய்க்
கருவிருந் தார்புயற் சோலைக் களிவண்டு காள்குழுன்மேன்
மருவிருந் துண்ண நினைந்தீ ரடுத்த வரைமறந்தே. 94

தருவாய்த் தருசசி வர்ணன் குளந்தைத் தமிழ்வரைக்கே
யொருவார்த்தை யாமில்லை யென்னாம லுண்டென்று மில்லையென்று
மிருவார்த்தை யும்வர லாமோ விவள்சிற் றிடைக்கெனவோ
மருவாய்த்த கூந்தலில் வண்டினங் காள்வந்து வாழ்வதுவே. 95

இம்மா நிலமுங் கடலு மலையுமெல் லாம்புரக்கு
மம்மால் குளந்தைச் சசிவர்ண ராச னருட்சிலம்பில்
விம்மா வெழுந்த வியன்முலைக் கேமக மேருவைத்துச்
சும்மா விடையைவைத் தீர்வண்டு காள்கொண்டை சூழ்ந்திருந்தே. 96

பொங்கோதை வேலைப் புவிக்கொரு சோழனைப் போலவென்றுஞ்
செங்கோ னடாத்துங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
லிங்கோ பொன் மானனையீர்விளை யாட விடமுமக்குத்
தங்கோர் கமலமென் பூவை யிடைவிட்டுத் தான்மகிழ்ந்தே. 97

இரும்பி னகங்கொண் டவர்பாற் றமிழியம் பாமலருட்
கரும்பி னகங்கொள் குளந்தைச் சசிவர்ணன் கார்முகிறான்
விரும்பி னகங்கொண்ட பூவை யுடுத்து விளங்களிகா
ளரும்பி கைங்கொண் டலரிடை யேவெறுப் பாவதன்றே. 98

சிலையார் புயன்சசி வர்ண மகிபன் றிகழ்க்குளந்தைக்
கலையார் மதிநுதற் கூந்தலில் வாழுங் கருவண்டுகாண்
மலையாள தேசத்தினால் வஞ்சி யூர்குடி வாங்கக்கண்டு
நிலையாதென் றெண்ணியு மேன்மேல் வருத்துத னீதியன்றே. 99

செழுந்திரு வார்பங் கயத்தேன் வயற்றலை தேக்கிமள்ள
ருழுந்திரு வார்தென் குளந்தைச் சசிவர்ண னோங்கல்வண்டீ
ரழுந்திய முத்தம் பவள நகையித ழாக்கியிடைக்
கொழுந்தில் வயிரம்வைத் தீர்முழு நீலக் குழலுவந்தே. 100

கொங்கார் புயாசல மீதே விசயக் கொடிபடரு
நங்கா வனைய சசிவர்ண ராச னவில்குளந்தை
யங்கான தாரணி கொண்டே முடிமன்ன ராவதுதான்
சிங்கா சனந்தவிர்ந் தோவண்டு காள்கொண்டை சேர்தனன்றே. 101

உள்ளத்தி லின்பம் பெறப்புவி யேழு முயர்கருணை
வெள்ளத்தி னால்விளை விப்போன் சசிவர்ண வேள்குளந்தைக்
கள்ளத் திருவிழி யார்மலர்க் கூந்தற் கருவண்டுகாள்
வள்ளத் திடையன்றி யெவ்வாறு கள்ளுண்ணும் வாயுமக்கே. 102

ஒன்னார் மணிமுடி தோயும் பதாம்புய னோங்குபுகழ்
நன்னா கரீகன் சசிவர்ண ராச னவில்குளந்தை
முன்னான சோலை வரிவண்டு காள்புத்தி மோசமன்றோ
மின்னா டனையிடை விட்டே யனத்தம் விளைந்ததுவே. 103

நெருங்கணி செந்தமிழ் வெண்புகழ் முல்லை நிரைநிரையா
யொருங்கனி மார்பன் சசிவர்ண ராச னுயர்குளந்தைக்
கருங்கணி கூந்தன்மெய் தொட்டுப் பயிறல் கருதளிகாண்
மருங்கணை தற்பொரு ளுற்றீ ரிலைமின் மருங்குலுக்கே. 104

துலையு மேகமும் போனிதி மாரி சொரிந்தெவர்க்குங்
கவலை யகற்றுஞ் சசிவர்ண தானகர் ணன்குளந்தை
யுவலை யமருங் குழல்வண்டு காளுற் றவரைவிட்டே
குவலைய முற்றும் புரந்திர வேகொண்ட கொள்கைநன்றே. 105

விந்தந் தனந்தம் புயமால் சசிவர்ண வேள்குளந்தைக்
கந்தந் தனந்தரு மின்னாள் குழலைக் கருதிநின்றே
யந்தந் தனந்தந் துயர்கொண்டு வாட வளியினங்கா
டந்தந் தனந்த வெனவிசை பாடத் தகாதுமக்கே. 106

கொழிக்குந் தரளஞ் செறிவையை நாடன் குளந்தைநகர்
செழிக்குஞ் சசிவர்ண ராசன் சிலம்பிற் சிலம்பரிகா
ளொழிக்குந் தரமன் றுருத்திரன் போலவொண் ணாதிடையே
யழிக்குந் தொழில் கொண்டு வெங்காள்கூட மடுக்கின்றதே. 107

செல்லூர் கைமேருச் சசிவர்ண ராசன் றிகழ்குளந்தை
நல்லூர் பயிலளி காளென்ன காரண நானவில்வேன்
வில்லூ ரணிதிகழ் வேலூ ரடுத்த வியன்வளஞ்சே
ரல்லூர் குடியிருந் தேயிடை யூர்தரி சாக்குவதே. 108

மணியுங் கலையுந் தருமால் சசிவர்ணன் வாழ்குளந்தைக்
கணியுங் கனகஞ் சொரிவரை யார்மின் கனங்குழன்மே
லணியுங் குவளையுங் கொண்டீர்வண் டீர்நடு வாக்கிநின்றாற்
பணியுந் தருமனென் றேசொல்ல லாமும்மைப் பாரிடத்தே. 109

நல்லினங் காக்குங் குளந்தைச் சசிவர்ண னாட்டுவெற்பி
லல்லினஞ் சூழ்குழன் மேலிசை பாடு மளியினங்காண்
மெல்லினந் தோய விடையினச் சந்த விருத்தமுற்றீர்
வல்லின வண்ணத்தின் சந்த முழுதும் வழுவுறவே. 110

ஆணிக் கனகமும் பாய்மாவும் யானையு மங்கர்வங்கர்
காணிக்கை நல்குங் குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவாய்
வேணிக் கருவண்டுகா ளிந்த்ர நீல வியன்மணியை
மாணிக்கச் செப்பின் மருங்கன்றிக் கூந்தலில் வைப்பதன்றே. 111

பண்டிக் குவலய மெல்லா மளந்த படிபுகழா
லெண்டிக் களக்குஞ் சசிவர்ண ராச னியற்குளந்தைக்
கண்டிக் கனையசொன் மங்கை யரைவிட்டுக் காதலுடன்
றொண்டிக் கிரங்கிநின் றீர்வண்டு காள்கொண்டை சூழ்ந்துகொண்டே 112

கணிபயில் சோலைக் குளந்தையர் வேந்தன் கவுத்துபமா
மணிதிகழ் மார்பன் சசிவர்ண ராசன் மலயவெற்பிற்
பணிமொழிக் கூந்தல் வண்டீ ரிடைவானம் பதிந்திடநல்
லணிபெறு தூவிவைத் தீர்பிறை வேணியற் கன்புறவே. 113

குறுகார் சலாஞ்செய் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பி
லுறுகா ரனைய குழல்வண்டு காடகு மோவுரையீர்
சிறுகா லசைந்திடிற் பாரம் பொறாச்சிற் றிடையறிந்துந்
தறுகாது நீரறு காலுட னேவந்து சார்வதுவே. 114

கொடுப்பவர் சூழுஞ் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பில்
வடுப்பயில் கண்மட வார்கூந்தல் வாழும் வரிவண்டுகா
டடுப்பவ ரின்றிக் குறுகலர் மீதிற் றளமெடுத்தீர்
நடுப்படை யானதி னாணற் றிடிலென்ன நாவுமக்கே. 115

கற்றோர் மறையவர் நீத்தோர் தெரிசொற் கவிஞரின்றி
மற்றோர் வணங்குஞ் சசிவர்ண ராசன் வளர்குளந்தை
யுற்றோர் குழலில் வரிவண்டு காளுயர்ந் தேபெருமை
பெற்றோ ரிடையிற் சிறுமைசெய் தாலென்ன பெற்றியதே. 116

நாடிக்கொண் டாடும் புலவோர்க் கிருநிதி நல்கிப்புகழ்
தேடிக்கொண் டாடுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
கூடிக்கொண் டாடு மொருவல்லி யன்றிக் குழலில்வண்டீர்
பாடிக்கொண் டாடிக்கொண் டீரே பதஞ்சலி யாரென்னவே. 117

சந்தா னமேமுதன் மந்தார மாகத் தழைத்துவள
ரைந்தாரு வன்ன சசிவர்ண ராச னருள்குளந்தைச்
செந்தா மரைமலர்த் தேனே யிதுநல்ல செய்கையன்றோ
நந்தாத நஞ்சுகைக் கொண்டுவிட் டீரிங்கு நாகத்தையே. 118

அரிபரி யோரெட்டி லொன்றாக வைங்கதி யாளும்வெற்றிப்
பரிவரும் வீரன் சசிவர்ண ராசன் பகர்குளந்தை
விரிதரு கான நடுவே மெலிய விளங்களிகா
ணெரிகுரல் கொண்டிசை பாடத் தொடுப்பது நேர்மையன்றே. 119

முடியுற்ற மன்னர் திறைதந்து கும்பிட்டு முன்புநிற்கும்
படியுற்ற கீர்த்திச் சசிவர்ண ராசன் பகர்குளந்தை
வடியுற்ற வேற்கண்ணி னாள்குழற் போதின் வரிவண்டுகாள்
கொடியுற் றிடிலெந்தப் போதினி னீர்குடி கொள்வதுவே. 120

நல்லார் துதிக்குஞ் சசிவர்ண ராச னவில்குளந்தைச்
செல்லாருங் கற்பகக் கானக மேவிச் சிறைவிரிக்குஞ்
சல்லாப வண்டினங் காளிடைக் கேயரிச் சந்திரன்முன்
சொல்லாத பேச்சையுண் டாக்குதற் கோகொண்டை சூழ்ந்ததுவே. 121

மீன்குடி வைத்த துவசன் சசிவர்ண வேள்குளந்தைத்
தேன்குடி வைத்தியவள் செவ்விதழ்க் கேசெவ்வி சேர்ந்திலகு
கான்குடி வைத்த குழன்மேற் குடிகொள் கருவண்டுகாள்
வான்குடி வைக்கத் துணிந்தீ ரிவள்பொன் மருங்குலுக்கே. 122

அம்பார் விழியன்ன மன்னார் மருவுசொர்க் காதிபன்போ
லும்பாக சாதன னாஞ்சசி வர்ண னுயர்குளந்தைக்
கொம்பானை யானையு நேரிழை யார்செய்த குற்றமென்னோ
வம்பார் குழலி லளியினங் காள்வந்து வாட்டுதற்கே. 123

அகர நகர மறையோர் புலவர்க் கன்பாகவரு
ளுகரன் சசிவர்ண ராசன் குளந்தையி லோங்கும்வெற்பிற்
றகரந் தருகுழன் மேல்வண்டு காள்கொம்பு தான்வெறுத்தோர்
சிகரம் பொருமுலை யாள்கொண்டை சேருஞ் சிறப்புநன்றே. 124

பம்பிய செந்தமிழ்க் கானைப் பதியிற் பரனிருதா
ணம்பிய போசன் சசிவர்ண ராச னவில்குளந்தை
வெம்பிய நீல வளிகா டலையின் விதிவசமோ
வம்புயத் தாளைவிட் டேயந்த காரத்தி லாழ்வதுவே. 125

கைமழை மேகமுந் தாண்டும் பரியுங் கவிக்கருளுஞ்
செம்மல் குளந்தைச் சசிவர்ண ராசன் சிலம்பிடத்தே
மைம்மலர்க் கூந்தல் வரிவண்டு காள்பகை வந்ததென்றோ
மெய்ம்மல ராள்பொன் மருங்கு றுவண்டு மெலிவெய்தவே. 126

நான்மருங் கெம்மருங் குங்கன மாய்ப்புகழ் நாட்டிமனு
நூன்மருங் கான சசிவர்ண ராச னுவல்குளந்தை
வேன்மருங் கன்னகண் ணாள்கருங் கூந்தல் விளங்களிகாள்
கான்மருங் கன்றியெக் காலுமுண் டோவொரு காவணமே. 127

பார்த்திபர் போற்றுஞ் சசிவர்ண ராசன் பயில்குளந்தை
சீர்த்திகழ் பந்தில் வடிவா ளிரண்டதிற் சேர்த்ததன்மேற்
கூர்த்திடும் பம்பர மாடக்கண் டேங்குழன் மேல்வண்டுகாண்
மாத்திரைக் கோலை விடுத்தாற் றவறு வருமுமக்கே. 128

உறியாடும் வெண்ணெ யுடன்பாற் றயிரையு முண்டமலர்ப்
பொறியாரு மால்சசி வர்ண மகீபன் புகழ்க்குளந்தை
வெறியார் மகரந்தந் தோயு மலர்க்குழன் மேலளிகாள்
சிறியா ரிணக்கமென் றோவெறுத் தீரிவள் சிற்றிடையே. 129

அறுகா லரவ மணிந்தோன் றனையர்ச்ச னைபுரிந்தே
யறுகாற் றெழுங் குளந்தைச் சசிவர்ண னருட்சிலம்பி
லறுகால் வருதும்பி காள்குழன் மீதங் கமர்ந்துநின்றே
யறுகா மவரைப் பழம்பகை தீர்தற் கூடாதுமக்கே. 130

மலைசெயு மம்புய வேள்சசி வர்ணன் வளர்குளந்தைச்
சிலைசெயு நாண்செயும் வண்டினங் காளிவள் சிற்றிடைக்கே
முலைசெயும் வெங்கொலை போதா மலேகுழன் மூடிநின்று
கொலைசெயும் பாவம் பலித்தோகொண் டீர்சிறைக் கோலங்களே. 131

மாகப் புயலனை யான்றென் குளந்தையில் வாழும்வச்ர
தேகப் புரந்தர னாகுஞ் சசிவர்ண தீரன்வெற்பிற்
சோகத் தவரை வருத்தியன் றோகுழல் சூழுந்தும்பி
யாகப் பிறந்து மளிகா டுதிக்கை யில்லாததுவே. 132

செஞ்சியர் வஞ்சிய ராகச் சமர்செய்து தேசமெல்லா
மிஞ்சிய கீர்த்திச் சசிவர்ண ராசன் வியன்குளந்தைக்
கொஞ்சிய பச்சைக் கிளிமொழி யாள்கருங் கூந்தல்வண்டீர்
வஞ்சிய ரன்றிநன் றோவாடல் பாடல் வழங்குவதே. 133

தன்முகங் கண்ட பணியார் பணியச்சமர் புரியும்
பொன்முக மார்பன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
நன்முக மாமலர்த் தேனே யதிசய நானென் சொல்கேன்
மின்முக மன்றி மழைமுகந் தான்பெற்ற மேன்மைகண்டே. 134

காவல ரேவல ராக்கிய வீரன்கொள் காணியென்றே
மாவலர் மார்பன் சசிவர்ண ராசன் வளர்குளந்தைப்
பாவலர் செஞ்சொற் பனுவலி னுண்மைப் பயனறியீர்
பூவலர் கூந்த லளிகாள் கருதும் புலமைநன்றே. 135

தருக் களுற்றேவிண் ணோருக்கு நன்னிழ றான்கொடுக்கும்
வருக்கமுற் றாருங் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பிற்
பெருக்கமுற் றீர்வண்டு காள்குழன் மேற்கொண்டு பின்னடுவே
சுருக்கமுற் றீர்பழு தன்றோ வுமது துணிவுநன்றே. 136

கரவிற் கலந்த விடைச்சியர்க் காயிரங் கண்ணன்வெற்றி
யுரவிற் கலந்த புயன்சசி வர்ண னுயர்குளந்தை
யரவிற் கலந்த வகலல்கு லாயிழை யார்பின்னகத்
திரவிற் கலந்திருந் தீர்வண்டு காள்வஞ்சி யேசுதற்கே. 137

விண்டுகண் டோடி வராதபொன் மேருவை வென்றமலர்ச்
செண்டுகொண் டேந்துங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
கண்டதுண் டோகொடி யேற்றமில் லாமலுங் காதன்மிகக்
கொண்டுநின் றீர்வண்டு காடிரு நாண்மலர்க் கூந்தலுக்கே. 138

சுமையமர் சேட னிளைப்பாற் றியபுய துங்கனெங்கோ
னுமையவர் பாலன் குளந்தைச் சசிவர்ண னோங்கும்வெற்பி
லமையமர் தோளி மலர்க்குழல் வாழு மளியினங்கா
ளிமையவர் வேந்தென்ன வோபகைத் தீரிவ் வரக்கரையே. 139

மழையொன் றிருகைக் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பி
லிழையொன் றிரண்டு மலைகொண் டொருசங்க மேந்தியிரு
குழையொன்று கஞ்ச மிருகய லோர்கொண்டல் கொண்டும்வண்டீர்
கழையொன்று தோளி முடிமீ திலேறக்*கடவதன்றே. 140

விதுரன் மனையில் விருந்துண்ட மேக மிகுபுகழ்சேர்
சதுரன் குளந்தைச் சசிவர்ண ராசன் றடஞ்சிலம்பின்
முதுரச வண்டினங் காளா சிடைவிட்டு மொய்குழன்மேன்
மதுரமுஞ் சித்திர வித்தா ரமுங்கொண்ட வண்மைநன்றே. 141

மலைமே லெழுது புகழ்க்குளந் தைச்சசி வர்ணன்வெற்பின்
முலைமே லெழுதுஞ் சிலைமே லெழுதிய மூன்றுகொண்ட
கலைமே லெழுதுங் குழன்மே லெழுதுங் கருவண்டுகா
ளலைமே லெழுத்தை யிடைமே லெழுதுவ தாவதன்றே. 142

நிசங்கொண்ட மால்சசி வர்ணன் குளந்தையி னீள்வரைக்கே
வசங்கொண்ட நாண்கொண்ட வண்டினங் காண்மலர்க் கூந்தல்கொண்டே
புசங்கொண்ட வில்லம்பு வாணுத னாட்டம் புகமகரத்
துசங்கொண்ட வேளிவள் சிற்றிடைக் கேபுகத் தோய்வதன்றே. 143

பந்தது போலக் குதிக்கின்ற வாம்பரி யான்றளவக்
கொந்தது மார்பன் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
றந்தது தானிடைக் கில்லையென் றேயறத் தான்வருத்த
வந்ததென் னோசொல்லு மாப்பெரி யோர்க்கிந்த வன்கண்மையே. 144

சூலத்தர் சுந்தரச் சொக்கேசர் பாதந் துதிக்குமனு
கூலத் தரசு சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
சாலத்த காது நடுவூர்க் கரசைத் தணந்துவண்டீர்
ஞாலத்தி னன்மை தருவா ரிடஞ்சென்று நாடுவதே. 145

பாரும் விசும்பும் படர்ந்தேறித் திங்கட் பழம்பழுத்துத்
தேரும் புகழ்ச்சசி வர்ண வரோதயன் றென்குளந்தைக்
காருந் தணியுங் குழலுந் தணியக் கருவண்டுகா
ணீருந் தணியலுற் றீரே மருங்கு னெருங்கநின்றே. 146

ஊறலுற் றேதரு பாலுக்கு மோருக்கு மொண்டரள
மாறலுற் றோர்வள ருங்குளந் தைச்சசி வர்ணன்வெற்பிற்
கூறலுற் றீரில்லை வண்டினங் காள்கருங் கூந்தலின்மேற்
றேறலுற் றீர்பின்னுந் தேருமை யுற்றதென் சிற்றிடைக்கே. 147

மிக்கவர் வாழுங் குளந்தைச் சசிவர்ண வேந்தன்வெற்பிற்
மைக்கருங் கண்ணிபைங் கூந்தலின் மேவிய வண்டினங்கா
ளக்கயி லாச மலையன்றி ராவண னன்றிடைநீர்
முக்கண னாரல்ல வேயென் கொலோபகை மூண்டதுவே. 148

விரிபுகழ் சேர்தென் குளந்தைச் சசிவர்ணன் வெற்பில்மணம்
புரிகுழல் பூப்பெறு கோதையென் றாலும் புகறும்பிநீ
ரரிவடி வாகி வனவாசஞ் செய்பவ ராய்வரினுந்
தெரியு மிதிலையில் வில்லல் லவேயிவள் சிற்றிடையே. 149

கமையார் குளந்தைச் சசிவர்ண ராசன் கனகவெற்பி
லமையாருந் தோளி மருங்கே மறைப்பொரு ளாகிலென்னா
மெமையாண் முருகனு நீங்களென் றேயிவ ளீர்ங்குழறா
னுமையாள் குழலல்ல வேவண்டு காள்வந் தொழிப்பதற்கே. 150

பொறையூர் புயற்சசி வர்ணன் குளந்தைப் பொருப்பளிகாள்
பிறையூர் சிரபுர நாதரென் றாலென்ன பேசியநீர்
நறையூர் குழன்மலர் செவ்வந்தி நாண்மல ராகிலென்ன
வுறையூ ரிவள்சிற் றிடையல் லவேசொல்லு முங்களுக்கே. 151

தண்டலை யொன்னல ருற்றேவல் செய்யத் தரைபுரப்பேன்
றண்டலை சூழ்குளந் தைச்சசி வர்ணன் றமிழ்ச்சிலம்பிற்
றண்டலை மென்மொழி யாளிடை கண்டுந் தமரவண்டீர்
தண்டலை யூர்மலர்க் கூந்தலில் வாழத் தகாதுமக்கே. 152

பூங்கரை மேற்குங் குமமலை யாரம் பொருதிரையா
லாங்கரைக் கும்வையை நாடன் குளந்தை யணிதுதியாத்
தீங்கரைச் சீறுஞ் சசிவர்ண ராசன் சிலம்பளிகாள்
பாங்கரை யன்றியுங் கூட்டமுண் டோசொல்லும் பைங்குழற்கே. 153

சீரென்றுஞ் சேர்தென் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
காரென்ற சோலை நடுவக லாவண்டு காளுமக்கு
மேரென்ற பூங்குழன் மேற்பட்ச பாதமுண் டென்பதெல்லாம்
பாரென் றிவள்சிற் றிடைவெளி யாகப் பகர்கின்றதே. 154

செழியன் குளந்தைச் சசிவர்ண ராசன் சிலம்பில்வைவேல்
விழியிடை தேய்க்கு மளிகாள் குழலில் விளங்குமக்கே
யழியெனுங் காரணப் பேரையல் லாம லளியெனவே
வழிமுறை யாக விடுகுறிப் பேர்வந்த வாறுநன்றே. 155

கோவா யுதவுஞ் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
காவாழும் வண்டினங் காண்மலர் கண்டு கருங்குழன்மே
லாவா கனஞ்செய்து கொங்கையை ஸ்தாபன மாக்கிமலர்
மாவா ழிடையையுத் யாபனஞ் செய்த மகிமைநன்றே. 156

மித்துரு வாகிய மால்சசி வர்ணவிற் பன்னனணி
முத்துரு வெண்ணகை யார்சூழ் குளந்தை முகில்வரைவாய்
நத்துரு விண்மதி யென்றவர் மீது நறையளிகாள்
வித்துரு வன்றி விழைகொண் டீரிவண் மென்குழற்கே. 157

பங்கய வாவி புடைசூழ் குளந்தைப் பதியில்வரு
செங்கைகொள் வேலன் சசிவர்ண ராசன் சிலம்பிடத்தின்
மங்கை மலர்க்குழல் வண்டினங் காண்மின் வளிரிடையின்
சங்கை யறிந்துகொண் டாலிரு ணீங்குந் தகைமையுண்டே. 158

சீரிட்ட மான குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பில்
வாரிட்ட கொங்கைக் குடையிடைக் கேபகை வைத்ததன்றோ
காரிட்ட கூந்தலில் வாழு மளியினங் காளுமது
பேரிட்ட ழைப்பார்கள் பொல்லா தவரைப் பெரியவரே. 159

பரவலர் கானிலும் வானிலு மேபதி யாகமற்றப்
புரவலர் போற்றுங் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பி
லரவலர் வேணிவண் டீர்வள்ளி யோரை யறப்பகைத்தே
யிரவலர் தம்மோ டுறவே னுமக்குவந் தெய்தியதே. 160

ஆல்போ லரசு சசிவர்ண ராச னருள்குளந்தை
வேல்போல் விழிச்சி மருங்குல்கண் டீர்முலை வெற்புங்கண்டீர்
மால்போலப் பூவி லளியெனும் பேர்கொண்ட வண்டினங்காள்
சால்போ மதுவெறி யாவல்கொண் டேகொண்டை சார்வதுவே. 161

அணிதிகழ் மார்பன் சசிவர்ண ராச னருள்குளந்தைப்
பணிதிகழ் வேற்றுத் துரும்பு கொள்ளான்முற் பழங்கதைபோன்
மணி நிறமாகித் துரும்பிடை நீக்கி வரிவண்டுகாள்
கணிபயில் கூந்தலங் காவை முழுதுங் கவர்தனன்றே. 162

மஞ்சஞ்சு செங்கைக் கொடையான் சசிவர்ணமால் குளந்தைப்
பஞ்சஞ்சு மெல்லடி மின்னா ளிடைதன பாரத்தினாற்
றெஞ்சஞ் சுதல்கண்டுங் கள்வெறி யாற்றும்பி காள்குழன்மே
லுஞ்சஞ் சரிப்பது நன்றல்ல காணினி யுங்களுக்கே. 163

மருப்பைவைத் தெட்டு வரைகளை யெட்டு வரைகள்செய்யும்
பொருப்பை வைத்தோன் சசிவர்ண மகீபன் புகழ்க்குளந்தைக்
கருப்பை வைத்தாலன்ன சொல்லியை வண்டினங் காள்குழன்மேற்
விருப்பைவைத் தேபகைத் தீரிடை மீது வெறுப்புவைத்தே. 164

தடையி லுயிர்ப்பயிர் வாடாமற் றண்ணிழ றாங்குமொற்றைக்
குடையில குஞ்சசி வர்ண மகீபன் குளந்தை வெற்பி
லிடையிலிராகத்து வேஷ முற்றீர் குழலேறி மலர்த்
தொடை யிலிராக முற்றீர் வண்டுகாளென்ன சொல்லுவனே. 165

அடியவராகப் பணியார் பணிய வவர் மருவுங்
கெடியைவென் றோன்சசி வர்ணனன் குளந்தைக் கிரிவளரும்
படியவர் போலவெப் போதும் பகர்பண் பயில்வண்டுகாள்
கொடியவர் தம்முறவாகா தென்றோ குழல் கொண்டதுவே. 166

சேலான வாரிதி தாண்டுந் கவித்திருத் தேர்நடத்து
மாலான வென்றிச் சசிவர்ண ராசன் வளர்குளந்தைப்
பாலான சொல்லி குழலளி காள்செயும் பண்பலகாண்
மேலான வரென்றுங் கீழா னவரை மெலிவிப்பதே. 167

மருவருபங் கயச்செங்கயல் பாயும் வயற் குளந்தைத்
திருவரு மார்பன் சசிவர்ண ராசன் சிலம்பளிகாள்
பொருவரு கூந்தலங் கானகத்தே சிவபோத முற்றீ
ருருவருவான பொருணினைந் தீரில்லை யுற்றுணர்ந்தே. 168

அந்தரம் பாதல மானாலுஞ் சொல்லசை யாதவென்றி
மந்தர திண்புய மால்சசி வர்ணன் வளர்குளந்தைக்
கொந்தவிழ் பூவில் வண்டீர் மணிமாலை கைக்கொண்டுறைந்தீர்
தந்திரமின்றிப் பலியாது மந்திரந் தார் குழற்கே. 169

வருகுன்றம் வாம்பரிசீருர் கவிஞர்க்கு மன்னு செம்பொன்
றருகுன்றமுந் தருமால் சசிவர்ணன் றமிழ்க் குளந்தை
யொரு குன்றெடுத்தவன் பேராசை கொண்ட வுமக்கிடைதா
னிருகுன் றெடுத்து மளிகாளி ஏக்கமெங் கேகியதே. 170

மற்பொரு திண்புயமால் குளந்தைச் சசிவர்ணன் வெற்பி
லற்பொரு கூந்தலளி காளிடை யிலறிந் தனமே
நற்பொரு ணன்குணர்ந் தேநவின் றாலுநல் கூர்ந்தவர்தஞ்
சொற்பொருள் சோர்வு தருமென வள்ளுவர் சொன்மொழியே. 171

கமரிடை செந்தமிழ்த் தேனை விடாமற் கவிஞரைத்தன்
றமரினு நல்குஞ் சசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
விமரிசை யானவளி யினங்காள் குழன் மேகத்தொடுங்
குமரியைத் தாங்க வசமே வொருவஞ்சிக் கொம்புநின்றே. 172

கடலையெல்லாந் திருப்பாற் கடல் செய்யுங்கன புகழ்சேர்
வடவரை யன்ன புயத்தான் சசிவர்ணமால் குளந்தைத்
திடவரை நாவலர் நன்னூலென் றோவிவள் சிற்றிடைக்கே
யிடம்வரு பூங்குழல் வண்டீர் தமிழெல்லை யிட்டதுவே. 173

மெய்யாரும் வாய்மைக் குளந்தைச் சசிவர்ண வேந்தன் வெற்பின்
மையார் தடங்கண்ணி கூந்தலில் வாழும் வரிவண்டுகாள்
கையான் முடிந்ததைக் காலா லவிழ்த்திடுங் கள்ளங்கொண்டே
செய்யாத காரியஞ் செய்தீ ரணியிழை சிற்றிடைக்கே. 174

தடுத்த விராவண மேருவின் மேற்றனி வாளியொன்று
தொடுத்தகை மால்சசி வர்ணன் குளந்தையைச் சூழ்வண்டுகாள்
கடுத்தரு கண்ணியிடைக்கே வருமின்னல் காட்டுதற்கோ
வடுத்தலர் பூங்குழன் மேற்றூம கேது வொப்பாகியதே. 175

வேல்பெற்ற வீரப் புயாசல ராசன் வியன்குளந்தைச்
சேல்பெற்ற கண்ணியர் வேள்சசி வர்ணன் சிலம்பிடத்தே
மால் பெற்ற கூந்த லளிகாள் பயோதர மன்னியவப்
பால்பெற் றிருந்துஞ் சவலை கண்டீரில்லைப் பாவையர்க்கே. 176

பூந்திருமங் கையெப்போது முலாவும் புகழ்க் குளந்தை
வேந்தர்கள் வேந்தன் சசிவர்ண ராசன் வியன்சிலம்பி
லேந்திழை சிற்றிடை கையாறு கொள்ள விசைவண்டுகாள்
கூந்தலி லேவரு மைமுகந் தான்கொண்ட கொள்கைநன்றே. 177

மந்திரத்திண் புயமால் சசிவர்ணன் வளர்குளந்தைக்
கந்தரக் காவிலிடையற வாழ்வண்டு காளிவடன்
சுந்தரக் கொங்கையிற் கண்டதுண்டோ சொல்லுவீரிலகு
மந்தரச் சேயிரு தாமரை பூத்த வதிசயமே. 178

சுடர்போலுக மெல்லாந் திரியாது செஞ்சொற் புலவோ
ரடர்மா கலியை வென்றோன் சசிவர்ண னருள்குளந்தைப்
படர்காவியங் குழன் மேலிசை பாடிப் பயில்வண்டுகா
ளிடர்தான் பிறப்பிறப் பென்றோ வொளிப்ப திவளிடைக்கே. 179

நன்னா வலர்க்குயர் தேவேந்திர தாரு நளினமலர்ப்
பொன்னாரு மார்பன் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தை
யன்னாள் குழலி லலரிதழ்த் தேனை யருந்தளிகாண்
மின்னாரை யன்றி யுண்டோ வநுராகம் விளைப்பதுவே. 180

நளியே தருவயற் கன்னலெல் லாநன் னளினநறைத்
துளியே பெருகுங் குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பிற்
கிளியே மொழிகண் கடலே முலைபொற் கிரியிலகு
மளியே குழல்வரிற் றாங்காவிடைக் கொப்பறிந்திலமே. 181

வானே ரிரவி யன்னையான் சசிவர்ண மால்குளந்தைக்
கானே மருவு நறைமல ராடுங் கருங்குழல்சேர்
தேனே மருங்குலைக் காட்டில்லை யாகிற் றிரண்முலையைத்
தானே சுமப்ப திதுவெனக் காட்டத் தகுமெமக்கே. 182

நல்குபொன் மேரு குளந்தைச் சசிவர்ண ராசன்வெற்பில்
பல்குமைக் காரணன் கூந்தலின்மேற்பார் பகர்வண்டுகாண்
மல்குமிப் பூமியோடந்தர சொர்க்கமு மானனையாட்
கல்குலிடை முலையென்றே யமைத்த ததிசயமே. 183

மேதி குலங்கள் கழை முத்துதிர்க்கும் வியன்குளந்தை
நீதிக் குபேரன் சசிவர்ண மன்னவ னீள்வரைவாய்ப்
போதிற்குலவு மளிகாள் குழலிற் புறத்தொழுகுஞ்
சாதிக் குணங்கொண் டிவளிடை வாட்டத் தகாதுமக்கே. 184

துயிலை விட்டாருங் கடலையு மாவுந் துய்த்திடுமோ
ரயிலை யுற்றோன் சசிவர்ண மகீபனருள் குளந்தை
வெயிலை யுற்றானின்னிசை வண்டுகாள் குழலேறுகருங்
குயிலையுற்றே தத்தை வைத்தீ ரொருவரிக் கொம்பிடத்தே. 185

ஈராறு கூட்டத் திலைந்தான வீரனெழிற் குளந்தை
சேராறு நூல்கொண்ட மால் சசிவர்ணன் சிலம்பளிகா
ளோராறு டனைந்து கொண்ட வோராறினுயர் குழன்மேற்
றாராறி லொன்று கைக்கொண்டி ரண்டே விடத்தக்கதன்றே. 186

மனருசிதன் சசிவர்ணன் குளந்தை வரையின்மிகுந்
தனருசி நீலபங் கேருக வாம்ப றளவமல
ரினருசியே முதலெல்லா ருசியு மிசைவண்டுகாள்
கனருசியிவ் விடையென் றறியீர் குழற் காவிலன்றே. 187

மாலளவான குளந்தைச் சசிவர்ண மன்னன் வெற்பில்
வேலளவாம் விழி வெற்பளவா முலை மேவுபுயற்
போலவளவாங் குழன்மேல் வண்டுகாளிந்தப் பூவையிடை
நூலள வாமினி யெவ்வள வாமென்று நோக்குவதே. 188

அம்புக் கிராவணன் றன்னுயிரே விருந்தாக்கி விண்ணோர்
கும்புக்குயிர் கொடுத்தோன் சசிவர்ணன் குளந்தை வெற்பிற்
கம்புக் குலாவளி காளிடைக் கேதுயர் காட்டுதற்கோ
வம்புக்கு மேற்கொண்டிருந்தீர் பைங்கூந்தலில் வந்துவந்தே. 189

பூவுண் டருளிய மால்சசி வர்ணன் பொருப்பளிகாண்
மாவுண்டிடையுண்டு பூங்குழல் விட்டு வந்தாற் குளந்தை
காவுண்டு பூஞ்சுவை யுண்டொரு கோடி கமலமுண்டு
நாவுண்டு கையுண்டு மொண்டு கொண்டுண்ண நறைகளுண்டே. 190

வரமுந்துதிண் புயத்தான் சசிவர்ணன் வளர்குளந்தை
யுரமென்ற மன்மத வேழங் கொண்டீரிவளொண் குழன்மேற்
பரவின்ப வண்டினங் காளுமக் குண்டுபைஞ் சூதமுல்லை
யரவிந்த நீலமிடை யிலில் லாத தசோக மொன்றே. 191

வார்பெற்ற வீரகண்டா மணிசேரு மலர்ப் பதத்தான்
சீர்பெற்ற மால் சசிவர்ணன் குளந்தைச் சிலம்பளிகாள்
சார்பற்றவர்க்கு நிலையில்லை யாமெனத் தையன்மலர்க்
கார்பெற்ற கூந்தலிற் சார்புற்று வாழுங் கருத்துநன்றே. 192

பாவுலவுந் திருமார்பன் குளந்தைப் பதியலைந்து
காவுலவுங் கொடை யாள்சசி வர்ணன் கனகிரியின்
மாவுலவும் மிடைமட்டறியா வண்டுகாள் குழன்மேற்
பூவுலகுள்ள மட்டெல்லா மறிந்த புதுமை நன்றே. 193

மருவார் கமலத்திற் சேல்பாய மாதர்வதன மொக்குந்
திருவார் குளந்தைச் சசிவர்ண ராசன் சிலம்பிடத்தே
யொருவே கொண்டிவ் விடைவாட்ட வண்டேனுக ரொண்மலர்த்தார்
முருகே விரும்பி வெறிகொண்ட தேது நம்மொய்குழற்கே. 194

குருகுலவுங் குளந்தைச் சசிவர்ண னெங்கோன் வரையின்
முருகுசரப் பணிமோக மாலை முதன் மகிழ்ந்து
சொருகு குழற்கு ளிசைபாடி யாடுஞ் சுரும்பினங்காள்
பெரு குடுமக்கரை ஞாணிருந்தால் வரும்பேரழகே. 195

தேசங் கொண்டாடுந் தமிழ்மாலை பூண்டவன் றென்குளந்தை
நேசங் கொண்டோன் சசிவர்ண மகிபன்முன் னேரலர்போன்
மோசங் கொண்டீரிவள் சிற்றிடைக்கே யலர்மொய்க்கும் வண்டீர்
வாசங்கொண் டீர்சண் பகமலர் மேற்கொண்ட வார்குழற்கே. 196

விசையை விபவன் னெதிர்த்தோர் விரோதிசெல் வேற்கரத்தான்
றிசையமர் கீர்த்திக் குளந்தைச் சசிவர்ணதீரன் வெற்பின்
மிசையலர் பூங்குழற் றாதுவி லானந்த மேன்மைகொண்டே
யிசையளி காள்சயம் வைத்தீ ரிலையிங் கிவளிடைக்கே. 197

கரைசெறி வாவிக் கயறுள்ளி வாழைக்கனி யதிர்த்துத்
திரைசெறிதென் குளந்தைச் சசிவர்ணன் சிலம்பிடத்தி
லுரைசெறி வண்டினங்காண் மின்னிடைக் குறிப்புற்றறியீர்
விரைசெறி கூந்தற் பாடட்டவணை கொண்ட மேன்மைநன்றே. 198

நல்வாக்கு நாவலர் செந்தமிழ் போல நறையொழுகச்
சொல்வாக்கனெங்கள் குளந்தைச் சசிவர்ண துங்கன் வெற்பிற்
செல்வாய்க்குஞ் சோலையளி யினங்காண் மணஞ் செய்தகுழ
லில்வாழ்க்கை செய்து துறந்தீரிவள்சிற் றிடையிபத்தே. 199

இவன்பன் னிருபது கையான் பகைவ னெனப் புகழ்மா
தவன் சசிவர்ணன் குளந்தை மின்னாள் குழற்றண்ணளிகாள்
சிவன்சுதன் மைத்துனன் றந்தைதன் சேயணி சிற்றிடைகா
ணவன் மணியாசன நண்பன் பகையுற வாவதன்றே. 200

சேய்விடும் வேற்கைக் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
லீவிடு மூச்சி லொடியு மிடையினி யென்றிரங்கி
வாய்விடு பாதச் சிலம்பு சிலம்பவும் வண்டினங்காள்
வேய்விடு தோளி குழன் மீதிருப்பது மேன்மையன்றே. 201

குறுகார் துயிலுஞ் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
சிறுகாலசைய விருகாலொ சிந்திடும் சிற்றடையார்த்
தறுகாலுமையுந் தொழுதேன் முக்காலு மைம்பாலளிகா
ளுறுகாலம் விட்டொன்று நாற்காலி யென்றென்றுரைத்து நின்றே.202

இகலேது மின்றிப் புவியாளும் வேந்தனென் ணேழரசு
புகலேயென வளருஞ் சசிவர்ணன் புகழ்க் குளந்தை
மிகலே கமழ்பங்கய நாதராகியும் வெம்மையுற்றும்
பகலே மறைய நின்றீர் வண்டுகாளிருட் பைங்குழற்கே. 217

கறைபெற்ற வேல்கொண்டு கால்கொண்டு வேலைக் கலக்குமெங்கோ
னறைபெற்ற வாய்மைச் சசிவர்ணராச னவில்குளந்தைத்
துறைபெற்ற காட்சி கருங்குழற்கே வைத்துச் சூழ்வண்டுகா
ணிறைபெற்ற வையமிவளிடைக்கே வைத்த நேர்மைநன்றே. 218

வாணியை வைத்த நன்னாவலர் தங்கலி வாரித்திக்கோர்
தோணியை யொத்த குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பில்
வேணியை மேவிலளிகாள் பின்னேற விட்டேறியநூ
லேணியை வாங்கிய வாறாகுஞ் சிற்றிடையேந்திழைக்கே. 219

ஞால நடுவணை மேருசசிவர்ண ராசனன்பு
சால நடுவணை தென்குளந்தைப்பதித் தையல்குழ
லேலநடுவணை யானந்தத் தேனுண்டிருக்கும் வண்டீர்
சால நடுவணை நாட்டமுற்றீரில்லைக் கற்றுணர்ந்தே. 220

மதுவென்றவனைக் கயிடவன் றன்னை வெண்மால் குறையா
விதுவென்ற தென்குளந்தைச் சசிவர்ணன் வியன்சிலம்பி
லதுவென்ற மின்கொடி போலே யிடையை யளியினங்கா
ளிதுவென் றறிய வுணர்ந்தீ ரிலைக்குழ லேறிநின்றே. 221

தேங்கமழ் சோலைக் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
பாங்கமர் நூல்கொண்ட கும்பங்கண்டேம் பண்பயில் வண்டுகா
டாங்கமர் மோகன தம்பனங் கண்டனந் தார்குழன்மே
னீங்களுச்சாடனஞ் செய்தா லுமக்கு நிகரெவரே. 222

குல்லையும் வெட்சியு மல்லிகையுங்குல வுங்குளந்தை
முல்லையந் தாமன் சசிவர்ண ராசன் மொழிவரைவாய்ச்
செல்லையங்கே வைத்துப் பூங்குழன் மீதிற் செறிவண்டுகா
ளில்லையென் றோசொல்லை வைத்தீ ரிவள்சிற் றிடையிடத்தே. 223

காக்கும் பெரியவுடயான் குமாரான் கமலச் செந்தேன்
றேக்குங் குளந்தைச் சசிவர்ணராசன் சிலம்பிடத்தே
சூக்குமமான விடைக்குக் கருங்குழல் சூழ்வண்டுகாள்
போக்கும் வரவும் புணர்வுமில் லாதருள் போதநன்றே. 224

திண்டேர் விசயன் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பில்
கண்டே யனைய மொழியிடை வாட்டங் கருதலின்றி
வண்டேனு கர்மலர்க் கூந்தலிற் றேனை மறுத்துவந்தாற்
றண்டேன் மலர்த்தடந் தானுவந் தாடத் தகுவதுண்டே. 225

மத்த மதாசல மால்சசி வர்ண மகீபனருள்
சித்த மதான குளந்தையங் காவிற் செறிவண்டுகா
ளுத்தமதான மென்றோ கருங்கூந்தலு வந்துபண்ணின்
சத்தமதாய் நின்று மத்திமதானந் தவிர்கின்றதே. 226

படவரவூருஞ் சடைமுடியார் பொற்பதம் பரவுந்
திடவரனாகுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பின்
மடவரல் கூந்தலிலுண்டாட்டுக் கண்டனம் வண்டரசே
கெடவரலிவ் விடையே கண்டனமென்னக் கேண்மையிதே. 227

பார்த்திபன் கீர்த்திச் சசிவர்ண ராசன் பயில்குளந்தைச்
சீர்த்திக ணம்ப ரணிமதிச் சோதி திருநுதலாள்
கார்த்திகை கூந்த லநிரோகணிப்பில் கருவண்டுகா
ளார்த்திடை மூலமறிந்தீரிலை நல் லனுடமுற்றே. 228

மாற்றார் வணங்குங் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பில்
வேற்றானனையவரி நெடுங் கண்ணி வியன்குழன்மேற்
சாற்றாமன்மன்ன வளிகாள் பெரிய தனஞ்சுமந்துந்
தோற்றாத் தனமல்லவோ நடுவே வந்து சூழ்கின்றதே. 229

பூவுக்குளிந்திர தாருவொப்பாகப் புலவர்புகழ்
பாவுக்கு வாய்த்த சசிவர்ண ராசன்பயில் குளந்தை
ஏவுக்கு நாண்வைத்த கண்ணாளிடை கண்டிருந்தும் வண்டீர்
காவுக் கசை வுண்டெனவோ மலர்க்குழல் கைக்கொண்டதே. 230

நெடும்புகழ் சேர்குளந்தைச் சசிவர்ணன் முன்னேரலர்போற்
கடும்பகை கொண்டிவ்விடை வருந்தாமற் கமலஞ் செந்தேன்
விடுஞ்சுனை வண்டினங்காள் பகர் பூம்பெறு மென்குழலாள்
கொடுஞ்சிறை நீக்கிலிராம னென்றே யும்மைக் கூறுவனே. 231

கறக்குஞ் சுரபி சிந்தாமணிபோலுங் கையான் புகழ்தான்
சிறக்குங் குளந்தைச் சசிவர்ண ராசனைச் சேரலர்போற்
றுறக்குமிடை கண்டும் வண்டினங்காள் குழல் சூழ்ந்திருந்தீர்
பறக்குங் குலத்துக் கிருக்குங் கொம்பேதேனும் பான்மைகொண்டே. 232

விடையூருங் கானைப்பதி யீசரைப் பணிவேந்தன் வைவேற்
படையூர் புயன் சசிவர்ணன் குளந்தைப்பதியின் மின்னாள்
சடையூர் நறைவண்டு காளுமக்கே வருந்தாழ்வு சொன்னே
னிடை யூறிங் கெய்திய வாறறியாதங் கிருப்பதன்றே. 233

காமர மந்திகள் கற்பகக் காவிற் கனியுதிர்க்குங்
காமரங்கான குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவாய்க்
காமர மாரளி காளிடைகண்டு கருங்குழன்மேற்
காமரம் பாடுவரோ நறுங்கானமுங் கைவிடுத்தே. 234

உறியுண்ட வெண்ணெயுண்டோன் சசிவர்ணனுயர் குளந்தை
நெறியுண்ட கூந்தலளிகாள் விழியிணை நீள்பிணையாய்க்
குறியுண்ட கொங்கைக்கட நாகநிற்கக் குலவிடைதான்
முறியுண்டிட வந்த காரணமேது மொழிமின்களே. 235

திருந்தாது துன்னலர் மீறவொட்டாதிந்தத் தேசமெல்லாம்
வருந்தாது காக்குஞ் சசிவர்ண ராசன் வளர்குளந்தை
யருந்தாத னையமின்னாள் குழன்மேலளி காளலரிற்
றருந்தாதிருக்கப் பொருந்தாதிடை யிழைதையலுக்கே. 236

அனபாயன் முல்லைப் புயாசலன் முத்தமிழாய்ந் தறிவிற்
பனமால் சசிவர்ண ராசன்குளந்தைப் பனிவரைவாய்த்
தனனாவெனு மிசைவண்டினங் காண்மலர் தாங்குகுழற்
கனயோகசாலி யுமக்கே னிடையிற் கடுந்துன்பமே. 237

அணியார் கவிஞர் வதனாம் புயங் களலர்த்துதின
மணியான வீரன் சசிவர்ணராசன் வளர்குளந்தைக்
கணியார் மலர்புனை கூந்தலில் வாழுங் கருவண்டுகாள்
பணியாரிவ ரென்னவோ விடைக்கேவெம் பகைகொண்டதே. 238

சிதையலை யொன்னல ருற்றலை யேறச் செயந்தரமல்
குதையலை மேவும் புயன்சசிவர்ணன் குளந்தை வெற்பிற்
சுதையலை வாரிதியிற் பிறந்தாள் குழல் சூழ்தும்பிகாள்
புதையலைத் தேடி நடுவே யழித்த புதுமைநன்றே. 239

சோகத்தை நீக்குங் குளந்தையர் கோன் றமிழ்ச் சொல்லமுத
பாகத்தை மேவுஞ் சசிவர்ணன் வெற்பிற்பயில் வண்டுகாள்
மேகத்தை நீலவெங்காளத்தைக் கங்குலை மேவி மின்னை
நாகத்தை மாரனை நீர்தான் வெறுப்பது ஞாயமன்றே. 240

திருவாரு மார்பன் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
லுருவான மாணிக்க வல்லியை மெல்லிய லோவியத்தைப்
பொருவான பாவையர் கூந்தல் வண்டீருயிர் போலுமின்னை
மருவாமல் வல்லிருள் வீணல்லவோ வந்து வாய்த்ததுவே. 241

நகைத் தாமரைமலர் மின்னாண் முறுவனவிலு முல்லை
முகைத் தாமங்காட்டுங் குளந்தைச் சசிவர்ணன் முன்னெதிர்த்துப்
பகைத்தார் செயலை யிடைக்கே யமைத்தவன் பாவலர்போற்
றகைத்தார் குழலிலளி காளிருக்குந் தகைமை நன்றே. 242

பண்டிரந்துஞ் சொற் சசிவர்ணராசன் பகர்குளந்தைச்
செண்டிரு பூண்முலையன்ன மின்னாளிடை தேர்ந்திருந்தும்
வண்டிருவார் கருங் கூந்தற் சொருக்கு மலரனையாய்க்
கொண்டிருந்தாலு மளிகாளுமக்குக் குறைவருமே. 243

வலங்காணரசர் மலிந்தொருகோடி வரினுமனங்
கலங்காதருளுங் குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவாய்
நலங்காணுங் கூந்தலளி காளுலகின் முன்னாளயனா
ரிலங்காபுரி யிட்டநாளோ வடியிட்ட திவ்விடைக்கே. 244

கருக்கொண்ட கொண்டலினெண் மடங்காக விக்காசினியி
லுருக் கொண்டருளுஞ் சசிவர்ண ராசனுயர் குளந்தை
மருக்கொண்ட கூந்தலளிகாளுமக்கென்ன வன்கண்மைகாண்
திருக்கொன்றை யுற்றவள் சிற்றிடைக்கே பகை செய்வதற்கே. 245

விருத்த முற்றோரைக் கலித்துறை சேரவென்றோன் குடையி
லொருத்தன் சசிவர்ண ராசன் குளந்தை யுயர்வரையின்
மருத்தகு கூந்தல் வண்டீரெழுத்து மருவிய சொல்
வருத்த மறிந்து கொண்டீரில்லை நாவலராகியுமே. 246

வச்சிர பாணி சசிவர்ணராசன் வளர்குளந்தை
மெச்சிய காவிலளி காடவறின் மிகும் பழிகாண்
குச்சியிலே யிரு பூரணகும்பமக் கும்பங்களி
னுச்சியிலாடலுற்றீர் கழைக் கூத்தருவப் புறவே. 247

விண்படர்கீர்த்திச் சசிவர்ணராசன் வியன்குளந்தை
பெண்பட ரிங்கிவள் சிற்றிடை கண்டு மெண்ணாதிருந்தீர்
பண்பயில் கூந்தலளிகாண் முகபங்கய மலரிற்
சண்பகப் பூவுண்டு வாசஞ் செய்தால்வருந் தாழ்வுமக்கே. 248

மாலடி வைத்த விவ்வையமும் வானமு மற்றுமொரு
கோலடி வைத்த சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
சேலடி வைத்த கண்ணாள் குழன் மாலாய்த் திகழ்வண்டுகா
ளாலடிவிட்டரவிற் றுயில் கூர்தலழகல்லவே. 249

சங்கமுங் கஞ்சமுந் தாருவும் வேண்டத் தழைத்தருளும்
புங்கவன் பொங்குங் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பிற்
கங்குலுந் திங்களு நட்பாகக் கண்ட கருவண்டுகாள்
சிங்கமும் யானையும் வேறாகச் செய்வது செவ்வையன்றே. 250

கன்னலிற் பின்னலிற் றாக்கித் தரளங் களையுதிர்த்துச்
செந்நெலிற் றுன்னுங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பின்
மன்னவிற் கூந்தலளிகாள் பொன் மாதரை யேவெறுத்துப்
பின்னலிற் கட்டுண் டடிபட வந்த பெருமைநன்றே. 251

படைகுடியே முதலாறங்கங் கொண்டிந்தப் பாரிலொன்றைக்
குடைநிழல் வாழுஞ் சசிவர்ணராசன் குளந்தைவெற்பி
னடையன மன்னவள் கூந்தல்வண் டீரம்பு ராசிதனைத்
தடைசெய்யு முங்கட் கிராவண நட்புத் தருவதன்றே. 252

மஞ்சுயர் சோலைக் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பிற்
கஞ்சுக நாகம்வன் சிங்க மிடையிடை கண்டிருந்து
நஞ்சுமிழ் கங்குல் வழியே வருதற்கு நான்மிகவு
மஞ்சுவ னஞ்சுவ னேதடஞ் சார லரியவரே. 253

குலகலம் பூண்ட சசிவர்ண ராசன் குளந்தைவெற்பி
லிலகல கம்பன் கண்ணா ளிடைகண் டிரங்கிவண்டீர்
பலகலகஞ் செய்சிலம்பு செந்தேனைப் பைங் கூந்தலினுங்
கலகல கல்லென வார்ப்பது கேட்டிருங் காதலுற்றே. 254

அரமஞ்சரி கொண்டு வெஞ்சமராடு மவர்கமரம்
புரமஞ்சரி சசிவர்ணன் குளந்தைப் பொருப்பளிகாள்
சரமஞ்சரி விழிசேர்த் தகையாரிடை தான்வெறுத்துச்
சுரமஞ்சரி தந்த வாசங் கொண்டாடத் துணிவதன்றே. 255

கிரியாய்க் கிளரும் புயத்தான் சமரிற்கிட் டாருகக்கே
சரியாங் குளந்தைச் சசிவர்ண ராசன்றடஞ் சிலம்பிற்
சுரியார் குழலிலளியினங் காண்முதற் சொல்லெழுத்தாய்
வரியாய் வரிக்கடையாய் நடுத்தான் விட்டவாறு நன்றே. 256

தவள தந்தா வளவேந்தன் வளவன் றளவப் பைந்தார்
துவளலங்காரப் புயன் சசிவர்ணன் றுதிகுளந்தைக்
குவளையம் பூங்குழ லாரோ டுறவு கொண்டே வண்டுகா
ளிவண் மருங்கேயறக் கூர்மை செய்தீரென்ன வேண்டுமிதே. 257

நித்தரைச் சுந்தரச் சொக்கேசரை யென்ன நெஞ்சினுள்வைத்
தித்தரை வைத்த புயன் சசிவர்ணனியற் குளந்தை
முத்தரை வென்ற சிறுநகையார் குழன்மொய் வண்டுகாள்
சித்தரையன்றி விடப்பாம்பு டனப்புச் செய்வதன்றே. 258

சங்கேறி மள்ளருமுஞ் சாலுலாவு தமிழ்க்குளந்தை
வெங்கேசரி சசிவர்ண மகீபன் வியன்சிலம்பிற்
கொங்கே தருமலர்க் கூந்தலில் வாழுங் குளிர்வண்டுகா
ளிங்கே பரந்த தென்னோ வரிதாள் வஞ்சி யேங்குதற்கே. 259

பையிட்ட பாம்பணைமேற் றுயின் மேகம் பகைஞர்நெஞ்சை
நெய்யிட்ட வேல்கொண்டறுத்தோன் சசிவர்ண னீள்குளந்தை
மெய்யிட்ட கூந்தலளிகாண் முத்தார முலைகுலுங்க
மையிட்டுப் பூமுடித் தீரா டவரை வருந்துதற்கே. 260

கட்குவளையின் குழையுங் குழையுமின்னார் கடும்போர்
கட்குவனை வின்மதன் சசிவர்ணன் கலைநிறைதிங்
கட்குவளை யொளி நல்குங் குளந்தைக் கருவண்டுகாள்
கட்குவளைக் குழலாசை கொண்டே யிடைகாய்வதன்றே. 261

கஞ்சவெள் ளோதிமஞ் சேர்தென் குளந்தைக் கடிநகர்வாழ்
மஞ்சலர் கற்பக வேந்தன் சசிவர்ண மன்னன்வெற்பில்
எஞ்சமில்லா வரிவண்டினங்காளிங் கிடையிடைவிட்
டஞ்சனம் பார்க்கிற் பலியாது கூந்த லடுத்திருந்தே. 262

நீடலைமேற்றுயில் கொண்டோன் முருகு நிறைந்தமுல்லை
யேடலர் மார்பன் குளந்தைச் சசிவர்ண விந்த்ரன்வெற்பிற்
கூடலையே கண்டன நடுவாகக் குழல்வண்டுகா
ளாடலை மாறி நின்றாடல் செய்தாலுண் டதிசயமே. 263

கொடுத்தருண் மேருச் சசிவர்ணராசன் குளந்தைவெற்பிற்
கடுத்தருள் பூங்குழல் வண்டினங் காள்கொடி கண்டறியா
தெடுத்தணி தாமரை முத்தமு மாலையு மேலமுங்கொண்
டடுத்திரு மிப்பெரும் பூஞ்சுனை வாய்கண் டறிந்திலமே. 264

நடுவரி பாயல் கொண்டோன் சசிவர்ண னவில்குளந்தை
வடுவரி பாய்விழியாள் கருங்கூந்தலில் வண்டினங்கா
ளடுவரி பாயிரண் டானையைக் கண்டொளிப் பாய்ப்பதுங்கக்
கொடுவரி பாயக் கண்டோங் கூழையாட்டைக் குறித்துநின்றே. 265

சேர்க்கும் புகழ்க் குளந்தைச் சசிவர்ணன் சிலம்பின்முகி
லார்க்குங் குழல்வண்டு காளிடைக்கே துயராமென்றெண்ணிக்
கூர்க்கும் விழிவண்டுதான் பதைத்தோடிக் குழை மட்டெட்டிப்
பார்க்குந் திரும்பு மும்மக்கே முகமன் பகர்வதற்கே. 266

எண்ணிய வெண்ணிய வெல்லாம் பெறமுன் னியற்றிவைத்த
புண்ணிய மால் சசிவர்ணன் குளந்தைப் பொருப்பளிகா
ணண்ணிய கோதையிற் றூக்கங் கைக்கொண்டு நடுவேவிட்டுப்
பண்ணியமே கொள்வதென்றோ பின்னட்டம் பலித்திடவே. 267

ஞானத்தவர் வாழ் குளந்தைச் சசிவர்ணனவில் வரைவாய்த்
தானத்தருனாவெனும் வண்டீருமக்குத் தகாது கண்டீர்
மீனத்தருள் விழியாளொரு பாதிவெறுத்திங்ஙனே
மானத்த மேவிநின்றீர் சிவனாகவும் வாழ்த்துதற்கே. 268

கங்கை தென்பாற் கடன்மேற் கீழ்கடன்மட்டுங் காக்குஞ் செங்கோல்
செங்கை கொண்டோன் சசிவர்ணன் குளந்தைச் சிலம்பளிகாள்
சங்கை கொண்டேவந்து சேராரை யஞ்சச் சமர்புரிந்தீர்
கொங்கை யிங்கே விட்டொருகோலக் கொண்டைக் கைக்கொள்வதன்றே. 269

எள்ளலிற் றருவுமேங்க நினைத்த தெல்லாமுதவும்
வள்ளல் குளந்தைச் சசிவர்ண ராசன் மணிவரைவாய்க்
கள்ளவிழ் நாண்மலர் வண்டினங் காண்மின் கருங்குழலிற்
றெள்ளலுற் றிவ்விடைக் கேபயம் வைத்தநும் செல்விநன்றே. 270

வேத முழங்கத் தமிழ்தான் முழங்க விளங்குமைந்து
நாத முழங்குங் குளந்தைச் சசிவர்ணராசன் வெற்பிற்
கீதமுழங்குஞ் சுனைவண்டுகாள் கொன்றைத் தீங்குழலின்
கீத முழங்கிசை யால்வல்லி சோர்ந்து கிடக்கின்றதே. 271

தேன்வருமுத் தமிழுஞ் சொரிமேகஞ் செகம்புரக்குங்
கோன்வரு தாரு சசிவர்ணவேடென் குளந்தை வண்டீர்
வான்வரு தும்புரு நாரத ரென்றும்மை வாழ்த்துதற்கோ
மீன்வரு கண்ணியிடை கண்டுங் கூந்தல் விண்மேவியதே. 272

கொங்குற்ற முல்லைத் தொடைச் சசிவர்ணன் குளந்தைவெற்பிற்
பொங்குற்பல மலர் வாவியுலாவிப் புகுமளிகா
ளிங்குற்ற சிற்றிடை விண்பகை கொண்டெதி ராரென்னவே
கங்குற் குடியிருந்தோ திருமேனி கறுத்ததுவே. 273

வெற்பிருக்கும் மணிமேடையுஞ் சோலையும் வீதியுஞ்சேர்
பொற்பிருக்குங் குளந்தைச் சசிவர்ணன் பொருப்பிடத்தி
லற்பிருக்குங் கொண்ட பாவையரை விட்டளியினங்காள்
கற்பிருக்குங் குழலா ரோடிணங்குதல் கற்பல்லவே. 274

சொல்லும் பெரிய வுடையான் குமாரன் றுதிக்கும்புகழ்
புல்லுங் குளந்தைச் சசிவர்ணராசன் பொருப்பளிகாள்
அல்லும் பகலு மகலா விருளொளி யாயிருந்து
வெல்லுங் குழலங்கு கண்டோவிச் சங்க மெலிந்திட்டதே. 275

செம்பாகமான கவி நாவலர்க்குச் சிந்தாமணிபோ
லும்பாரில் வந்த சசிவர்ண ராசனுயர் குளந்தைச்
சம்பாவன நிகர் முல்லை யமுதுண்ணத் தண்ணளிகா
ளைம்பாலிருந்து மிடையரை வாதிக்கு மாசைநன்றே. 276

ஒல்லை யடுத்துப் பெருவிர லூன்றி யொருமிதிலை
வில்லை முறித்த குளந்தைச் சசிவர்ண வேந்தன்வெற்பி
லல்லை நிறுத்திய பூங்குழல்வாய்க் கொண்டளி யினங்காண்
முல்லை யடுத்ததிங் கென்னோ கொடிச்சியர் மோகம்விட்டே. 277

திருவே வுருவு செந்தாமரையாகத் திகழ்குளந்தை
யுருவே படைத்த வின்மாரன் சசிவர்ண னோங்கும்வெற்பிற்
றருவே யுலாவளிகாள் குழற்கானகந் தான்மருவி
வருவே டராகி நின்றிச்சிங்க வேட்டையும் வாய்த்ததுவே. 278

ஆறுமதிலு மடவியுஞ் சேரு மடையலரைச்
சீறும்புலி சசிவர்ணன் குளந்தைச் சிலம்பிடத்தி
னாறுங் குவளை வண்டீரிடை கண்டு முன்னாட்கமுநீ
ரேறுந் துணிவு கொண்டோ குழன்மீது வந்தேறுவதே. 279

வேதப் பரியையங்கதி காட்டிக் கூடலின்மேவு சொக்க
நாதர்க்கடிமை செய்வோன் சசிவர்ண னவில் குளந்தை
மாதர்க்கிடை யுள்ளவாறறிவீர் மலர்க் கூந்தலின்மே
லூதப்பறக்கும் வண்டீர் பகையேன் வந்ததுங்களுக்கே. 280

கருமா முகிலெனவே யுலகேழையுங் காத்தருளுந்
திருமால் சசிவர்ண ராசன் குளந்தைச் சிலம்பளிகா
ளொரு மாவரை யிருமாவரை தான் சுமந்தொல்கக்கண்டு
வருமாமயிற் குழன்மேற் பலமா வந்து வாழ்தனன்றே. 281

குடைகண்ட கண்டன் சசிவர்ண ராசன் குளந்தைவெற்பிற்
பிடைகண்ட வன்னமன்னாள் குழன்மேற் பயில்பெண் வண்டுகாள்
தடைகண்ட வையத்தின் மன்னிய மூன்றிற் றவறுண்டுகா
ணிடைகண்ட பின்னன்றியே முடிகாண்பதி யாவர்க்குமே. 282

விடைக் கிறையோன் பதசேகரன் போரில் வெகுண்டெழுந்த
படைக்குறை வாள் விதிர்ப்போன் சசிவர்ணன் பயில்குளந்தை
நடைக்குறையன்னம் பெறு நடையாட்டு நவிரவண்டீ
ரிடைக்குறை யெய்தி கடைக்குறை யுங்களுக் கெய்துமின்றே. 283

பையாடரவ மணிந்தோன் சரணம் பரவுமிரு
கையான் சசிவர்ண ராசன் குளந்தையிற் காரிகையாண்
மையார் கருங்குழன் மெய்யாகக் காட்டி மருங்குல்வெறும்
பொய்யாக்குவதுமக்கேன் வண்டுகாளிது புத்தியன்றே. 284

காரஞ்செய் வேற்கைச் சசிவர்ணராசன் குளந்தைவெற்பின்
பாரஞ்செய் பூண்முலையாண் மெலிந்தோர் தம்பருவங் கண்டே
காரஞ்சிய மலர்க் கூந்தலிலேறிக் கருவண்டுகா
ளாருஞ் செய்யாத வுபகாரஞ் செய்த தழகியதே. 285

கெடியுற்ற துன்னலர் போற்றச் சமரங்கிளர் கருடக்
கொடியுற்ற போசன் சசிவர்ணராசன் குளந்தைவெற்பில்
வடியுற்ற நீலவரிவண்டு காளொரு வஞ்சிக் கொம்பி
னடியுற்றிடின் முடிமீதிலெவ் வாறங்கமாவதுவே. 286

நீர்முகங்கொண்ட பயிர்ப் போலுயிர்ப் பயிர்நேசஞ் செயுஞ்
சீர்முகங் கொண்ட குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பில்
வார்முகங் கொண்ட வினை முலையாள்குழல் வண்டினங்காள்
கார்முகங் கொண்டு கணைக்காறவிர்தல் கருமமன்றே. 287

துதிநுட்பங் கொண்டு தென்காளீசரைத் தொழுவோன் மனுநூல்
விதிநுட்பங் கண்ட குளந்தைச் சசிவர்ண வேள்சிலம்பின்
மதிநுட்ப நூலோ டுடையார்க்குப் பின்னும் வரிவண்டுகா
ளதிநுட்பங் காட்டுதற்கோ குழன்மேல் வந்தமர்கின்றதே. 288

குணில் கன்றெனக் கொண்டெறிந்தோன் விண்ணாட்டிற் குலவுசிந்தா
மணி நீதிவாழுங் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பி
லணிநிற மாமயிலாடப் பண்பாடு மளியினங்காள்
பணிவிடை செய்ய விருந்தீர் குழன்மிசை பாவையர்க்கே. 289

நிரைக்காகக் குன்றைக் குடையாகக் கொண்டு நின்றோனருளுந்
துரைக்காமதேனுச் சசிவர்ண ராசன் றுதிகுளந்தை
வரைக் காவுலா வளிகாளி ழுந்தீர்மதி மாதங்கமர்
மரைக்காசை விட்டுக்குழற் காணிக்காசை யுண்டாகிநின்றே. 290

காயான மனமிக்கக் கவடு படாமலெக் காலத்திலுந்
சாயாத தாருசசிவர்ண ராசன் றமிழ்க்குளந்தை
வேயாருந் தோளிமலர்க் கூந்தன்மீது விளங்களிகா
ளீயாத வளிவ ரென்றோ பகைத்த திவளிடைக்கே. 291

குடக்குங் குணக்கும் வடக்கோடு தெற்கண்ட கோளமட்டு
நடக்கும் புகழ்ச் சசிவர்ண மகீபனவில் குளந்தை
வடக்குங்கும முலையாள் குழலேறி வண்டீர் மறைநூல்
கடக்குன்றவர் தெய்வமிவ் விடையே வைத்த காட்சிநன்றே. 292

கூறுபழுக்குலை முக்கனி சாறொடு குங்குமச்செஞ்
சேறு பெருக்குங் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
லேறுங்குழல் வண்டுகாண் முலைதாங்கு மிவளிடைகண்
ணூறு வருமெனவோ தெரியாம லொளிப்பதுவே. 293

அரிமா விரணியன் மார்பைப் பிளந்தவனாவி கொண்ட
வரியான வீரன் சசிவர்ண ராசனருள் குளந்தை
யரியார் மலர்நெடுவேற் கண்ணி கூந்த லரமனையி
லரியாக வாழ்ந்து நடுவே யிவ்வைய மழிப்பதுவே. 294

மாசறைவாம் பரிவீரர் பல்லாயிரர் வந்திறங்கும்
பாசறை வென்ற சசிவர்ண ராசன் பகர்குளந்தை
மூசறை வண்டினங் காணல்லதிசய மொய்குழன்மேற்
காசறைக் கைக்கொண்டிடையே செலவிடக் கண்டதுவே. 295

தெள்ளித் தெளிந்த தமிழ் நாவலருக்குச் செம்பொன்மணி
யள்ளிக் கொடுக்குஞ் சசிவர்ண ராசனணி சிலம்பிற்
புள்ளிக் கலவு மயிலிடைதான் கண்டும் பூங்குயின்மேல்
வெள்ளிச் சிமிழிட்ட சாந்தென்னவோ முல்லை மேவியதே. 296

வரும் புங்கவர்தரு வானோன் சசிவர்ண மால்குளந்தை
யரும் புங்கமலத்தின் மாவடிவான வளியினங்காள்
விரும்புங் கயல்கொள் வதனத்திற் கூந்தலிற் வேண்மலர்க்கைக்
கரும்புங் கணையுங் கொண்டீர் நடுவேசங் கரியென்னவே. 297

வெம்பிக் குலாவிய வாலியை வென்றவன் மிக்கசெல்வந்
தம்பிக்கு நல்குஞ் சசிவர்ணராசன் றமிழ்க்குளந்தை
பம்பிக்குவளை யளிகாளிடையைப் பகைத்துமிரு
தும்பிக்குத் தும்பி துணையாக வோகொண்டை சூழ்கின்றதே. 298

தென்னிட்டமான குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பிற்
பொன்னிட்ட கொங்கை மின்னாண் மருங்கே பொரும்போர்தொடங்கிப்
பின்னிட்ட கூழையிற் பின்காட்டியதன்றிப் பேசும்வண்டீர்
முன்னிட்ட கால்பின் பெயராத வீர மொழிமின்களே. 299

வேளஞ்சும் வேள்சசிவர்ணன் குளந்தையின் வெற்பில்மந்த
தூளஞ் செறியும் வண்டீர் பஞ்சநாதத் துலங்குமணிக்
காளங் குழலகஞ்சங் கீதமுழங்கவுங் கண்டனம்பொற்
றாளஞ் சுமக்குஞ் சிறுபறை யொன்று தவிர்ந்திடவே. 300

போர்விந்தமான புயத்தான் சசிவர்ண பூபன் வெற்றி
தாவிந்த ஞாலம் புரந்தோன் குளந்தையிற் றண்ணளிகாள்
வாவிந்ததான வதனமின்னாண் மருங்கே வகுத்த
வாவிந்த நாதனிசா பதியானததிசயமே. 301

மகரக் கொடியுயர்த்தோன் கவிவாணர் வளருமிசை
பகரத்தருங் கொடையான் சசிவர்ணன் பயில்குளந்தை
நகரப் புதுமலர் வண்டீரிதழ்த் தேனை நழுவியந்தோ
தகரக் குழலில் விழுந்தீரிடையிற் றடையின்றியே. 302

வண்டார்த் திடுமுல்லை காட்டிய நீலமலர்த் தொடையான்
பண்டாற் றுயிலுஞ் சசிவர்ணராசன் பயில்குளந்தைக்
கண்டாற் கனிமொழி சிற்றிடைக்கே யின்னல் காட்டுதற்கோ
வுண்டாச் சுமைக்குழல் வண்டீ ரவசர வூழியமே. 303

புல்லாரெக்காலும் விலங்கே பொருந்தப் புவிபுரந்து
நல்லாரைக் காக்குங் குளந்தைச் சசிவர்ணராசன் வெற்பிற்
செல்லாரப் பூங்குழல் வண்டீரிடையிற் சிறுமைவந்தாற்
கல்லாரப் போது விலக்குதற்கோவங் கணங்கொண்டதே. 304

புகலையடைந்தவர் தம்பாற் கருணை புரிந்தெவர்க்கு
மிகலை முனிந்தருள் மால் சசிவர்ணனியற் குளந்தை
மிகலை மருவு பைங்கூந்தலிலே வந்து மேவளிகாள்
பகலை யிரவுசெய்தீ ரரிநீரெனும் பான்மை கொண்டே. 305

கதிதானுதவு தென்காளீசர் பாதங் கருதியென்றுந்
துதிதான் பயிலுங் குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பிற்
புதிதான பூங்குழல் வண்டீர் நடுவன்றிப் போதுமுங்கள்
மதிதான் மயங்கு மிருணீங்குவதென்று வாய்ப்பதுவே. 306

வேலிடை வேலையடக்கிய வேந்தனவ் வேலையிலோ
ராலிடையே துயின்மால் சசிவர்ணனருள் குளந்தைச்
சேலிடை நீலவிழியாள் கருங்குழல் சேர்வண்டுகாள்
பாலிடை நீர்பிரித்தீரன்னமாகப் பகர்வதற்கே. 307

நலமே தரும்பே ரியவுடையான் செய்த நல்லதவோ
பலமேயனைய சசிவர்ண ராசன்பயில் குளந்தைப்
புலமேவு கொம்பிடை கண்டு மொண்ணாதிவள் பூங்குழலின்
மலர் மேலிருப் பதளிகாளம்மா வென்று வாழ்த்துதற்கே. 308

பூவலவனொரு சோதரனாகப் புவிமுழுதுங்
காவல்புரி சசிவர்ணன் குளந்தைக் கனகிரியா
யாவலிடையைப் பகைத்தே குழலுக் கடிமையுமுற்
றேவல் புரியுமதற்கோ தலையிலெழுதியதே. 309

தேருளேந்து கல்விபயிர் தழைத்தோங்கிச் செழிக்கநல்கும்
பொருளேந்து மேகன் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பின்
மருளேந்தும் வண்டினங்காளிடைக்கே பகை வைத்ததுவுஞ்
சுருளேந்தி நின்ற தென்னோ சொல்லுவீர் மலர்த் தோகையர்க்கே. 310

தாதையைக் கண்டு வணங்கி முன்னாட் டடந்தாமரைப்போற்
சீதையைக் கொண்டருண்மால் சசிவர்ணனன் றிகழ்குளந்தை
யூதையைக் காட்டுஞ் சிறைவண்டுகாண் மலருள்ளுறையுங்
கோதையைக் கூடியிடை நடுவே வந்தகோபநன்றே. 311

அரவே யொருதலை யாயிரமாக வடற்பரிமேற்
பொரவேறுஞ் சிங்கங் குளந்தைச் சசிவர்ணன் பூபன்வெற்பிற்
கரவே தனத்திடைவந்த தென்றே கருதாதளிகா
ளிரவே பகலென்றிருந்து கொண்டீரென்ன வேளனமே. 312

பெரும் பாருலகி னினைத்தன யாவும் பெறமகிழ்ந்து
தரும்பாரி சாதநிகர் சசிவர்ணன் றமிழ்க்குளந்தைக்
கரும்பார் மொழிகுழன் மேனீல மாமணிகாட்டும் வண்டீர்
பெரும்பாசி கோத்திருந்தீர் நடுவே குற்றம் பூண்டதுவே. 313

தற்பரை பூரணி சொர்ணவல்லிக் கொடித்தாயுபய
பொற்பதம் போற்றுஞ் சசிவர்ண ராசன் புகழ்க்குளந்தைக்
கற்படர் காவலர் நீடிய கங்குல்கண் டீர்வண்டுகாள்
வெற்பரை யிங்கினி யெவ்வாறு நான்கண்டு மேவுவனே. 314

தேசுந் திருவுந் வளர்மால் சசிவர்ணன் றென்குளந்தைக்
காசுங் கலனுஞ் செறிமுலையாள்குழற் கானவண்டீர்
வீசுங்கைவண்டு மருங்குறு வண்டு மெலிதல் கண்டே
பேசுங்கண் டீரக லீரக லீரென்ற பேர்பெறவே. 315

மோகங் கொண்டாயிழைமார் விழிபாய முன்விண்ணவர்கோன்
தேகங் காண்டான் சசிவர்ணன் குளந்தைச் செழுந்திருப்போ
லாகங் கண்டாள் குழன்மேலளி காளரவைப் பகைத்து
மேகங் கண்டாட மயிலல்லவே யென்ன வீறுமக்கே. 316

நாண்கொண் டரம்பையர் நாணுறப் பானிற நண்ணவிண்ணோர்
சேண்கொண்ட கீர்த்திக் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
லூண்கொண்ட தேன்குழல் வண்டீரொல்காம லூறுமடிப்பாற்
பூண்கொண்ட சிற்றிடை கண்டீரிலை மலர்ப் பூவையர்க்கே. 317

வைகைக்கிறை தென்குளந்தை நல்லூரன் மனுமுறையே
செய்கைக் குவந்த சசிவர்ணராசன் சிலம்பிலுங்கண்
மெய்கைக்கொள் கூந்தலளியினங் காண்மிகவுங் கனமாய்ப்
பொய்கைக்கு மேற்கொண்டு வந்தீர் மருங்குல் புலம்புதற்கே. 318

கலைக்குளிர் வான்மதி போல வளர்கணயாகன் வென்றிச்
சிலைக்குருவான சசிவர்ண வேடென் குளந்தை வண்டீர்
நிலைக்குமிசை மொழி கூந்தன் முலைக்குணின்றீர் முலைமா
மலைக்குடை யிவ்விடை கொண்டாலரியென்று வாழ்த்துவனே. 319

வருகும்பமா முனியோன் முத்தமிழிசை வாய்த்த செந்தேன்
பருகுஞ் சசிவர்ண ராசன் குளந்தைப் பனிவரையி
லிருகுங்குமக் கொங்கை மின்னார் குழலி லிலங்களிகாள்
பெருகு கலாப முண்டென்றோ மருங்குல் பிரிந்திட்டதே. 320

வேதமொன்றே தவிர்ந் தெல்லாக் கலையும் விளங்கியநன்
னீதன் சசிவர்ணராசன் குளந்தை யினீள்வரைவாய்ச்
சீதபங் கேருகமின்னாள் குழலிற் செறிவண்டுகாள்
சூதமென்றோ கொம்பினுக்கே வடுவந்து சூழ்கின்றதே. 321

மீனாடு வேலைநடுவே முளைத்த வெஞ்சூரனுட
லூனாட வேறொட்டவேள் சசிவர்ணனுயர் குளந்தை
மானாடு கூந்தலளி யினங்காள் கருவைப்பரன் போற்
தேனாடல் கொள்ளக் களவிடை மேவிய செய்கைநன்றே. 322

சீதரன் வென்றி ரவிகுலசேகரன் செய்யமனுச்
சோதரனான குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பின்
மாதரம்பார் விழிகூந்தலில் வாழும் வரிவண்டுகாள்
பூதரங் கொண்டனமென்றோ வெதிர்த்ததிப்பூ விடையே. 323

கள்ளலை பாய்மலர் முல்லைப் புயாசலன் கற்றவர்சொல்
வள்ளலெங்கோன் றென்குளந்தை சசிவர்ண மன்னனிவன்
னுள்ளமரோசை வண்டீர் நடுவே குற்ற முற்றதென்றே
புள்ளடியிட்ட தறியாத தென்னமைப்பூங் குழற்கே. 324

தோட்டலரம்புய மின்னாள் பயில்வளஞ் சூழ்குளந்தை
நாட்டருள் வேந்தன் சசிவர்ணமால் வெற்பினாடளிகாள்
கூட்டன் முயங்கன் மகிழ்தல் கருங்குழல் கொண்டுபொய்பா
ராட்டல் பிரிதலிரங்கலி வளிடைக் காவதன்றே. 325

தேறிய கீர்த்திக் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பின்
மீறிய காமமத மோகங் கொண்டலர்மென் குழன்மே
லூறிய தேனுண்டளிகாள் வைத்தீரிவளொல் கிடைக்கே
கூறிய லோபத்துடன் மாச்சாரிய குரோதங்களே. 326

உரந்தரு சங்கப் புலவோர்கள் சூழிவ்வுலகில் வந்த
புரந்தரனாகுங் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பிற்
சிரந்தருபூங் குழன்மேல் வண்டுகாளிவள் சிற்றிடைதான்
கரந்துறையான தெழு கூற்றிருக்கையுங் காண்மின்களே. 327

வாட்டும் புலியும் பசுவுமொரு துறை வந்துணநீ
ரூட்டுங் குளந்தை சசிவர்ண ராசனுயர் வரைவாய்
நாட்டுங் கருங்குழல் வண்டீரதிசய நன்மைபெறக்
காட்டுங் சகுன நடுவேதுயர் பெறக் காட்டியதே. 328

தொழுது பணியலர் மார்பிலடு சுடர்வேல் கைக்கொண்டே
யுழுது பொருங் குளந்தைச் சசிவர்ணனுயர் வரைவாய்ப்
பொழுதகல் சாரலரிய வரேபுகல் வீர்பொருந்த
வெழுது மிடையன்றி யுண்டோவலர் மடலேந்துவதே. 329

முழவும் பதலையுஞ் சல்லரி திண்டிமமும் முழங்கும்
விழைவும் பெருகுங் குளந்தைச் சசிவர்ண வேந்தன்வெற்பின்
மழவுவண்டீர் சுமைதாங்குந் தொழிலிடை மாற்றிமல
ருழவுதொழில் கொண்டு காராளரானது முத்தமமே. 330

தீக்கணை வேலையில் விட்டிலங்கேசன் சிரந்துணியத்
தாக்கமர் செய்யுஞ் சசிவர்ணராசன் றமிழ்க்குளந்தை
யாக்கம் வளருமளிகாண் மணம் பொருட்டாக மலர்த்
தூக்கமும் தொங்கலுங் கொண்டீரிடையிறுந் தோகையர்க்கே. 331

கருமங்க ளோரெட்டு மெட்டியு மண்டகடாக மட்டும்
புகுபுகழ் சேர்தென் குளந்தைச் சசிவர்ண பூபன்வெற்பின்
மிகுகருங் கூந்தலளிகாண் மருங்கிசை மேவிநின்றாற்
றகுநறுங் கானத் தவரென்ன வேயுமைச் சாற்றுதற்கே. 332

சீலமும் வாய்மையுஞ் சேர்சசிவர்ணன் றிகழ்குளந்தைக்
கோலமு மாவியும் போல்வாளிடை கண்டுங் கோலவண்டீ
ராலமு நல்லவமுதமுஞ் சேரம்புய மலர்மே
னீலமு முல்லயும் பூத்ததென்றோ நின்றுலாவியதே. 333

வில்லிளங் காமன் குளந்தைச் சசிவர்ண வேந்தன் வெற்பிற்
புல்லினங் காளையரிய வரே கஞ்சப் போதிடத்திற்
சொல்லிளங் காம ரொருவல்லி வாடச்சுரங் கடந்தீ
ரல்லிளங் கான் கடந்தாலெதிராங் கமலாலயமே. 334

கூனுக்கும் வேம்புக்கு நீறோதியிட்டவன் கூறுதமிழ்த்
தேனுக்கு நேசஞ் செய்மால் சசிவர்ணன் றிகழ்குளந்தைக்
கானுக்குந் தேனுக்கு மூக்கோடுநர்க்குங் கருணை செய்தீர்
மானுக்கிடை கொடுத்தாலுமைப் போலில்லை வல்லவரே. 335

புரவுக்குட் செந்நெலுங் கன்னலும் பூகம் பொருள் குளந்தைத்
திரவு க்ரவீரன் சசிவர்ண ராசன் சிலம்பளிகா
ளரவுக் கமுதந்தரு மல்குலாள் குழற்காசை கொண்டீ
ரிரவுக் குறியிடை யிட்டறியாமலிங் கின்னமுமே. 336

மிதமானவர் தங்கனகாசல மெதிர்ந் தோர்வணங்கும்
வதனார விந்தன் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பி
னிதமான கூந்தல் வண்டீர் கானவேடரை நீங்கள்விட்டும்
மதயானை மேற்கொண்டவரை யிங்கேகண்டு வாழ்த்துங்களே. 337

வேலை விரும்பு செவ்வேள் சசிவர்வணன் வியன்குளந்தை
நூலை விரும்பிய சிற்றிடை வர்டநுவல் வண்டுகாள்
சேலை விரும்புங் கலைசேர்மதிமுகச் சேடியர்போன்
மாலை விரும்பித் தரித்தீர் கனிமொழி வார்குழற்கே. 338

இயலுமிசையு மிசைநாடகத் தோடெண்ணெண் கலையின்
செயலும் பயில் சசிவர்ணன் குளந்தைச் சிலம்பளிகாள்
புயலுந் திமிரமுங் காவும் பொருந்திய பூங்குழன்மேன்
முயலுந் தொழில் கொண்ட தென்னேயிடுப்பு முறிந்திடவே. 339

குச்சரரீழர் மராடர் விராடர் குடகரடர்
மச்சரர் போற்றுங் குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பி
னச்சிய கானகநீர் வேட்டுலாவி நலியும் வண்டீர்
பச்சிளநீரு சுமந்தொல்கி யிங்கே நிற்கும் பைங்கரும்பே. 340

மிக்காமுல கிலுயிர்ப் பயிரேங்கி விடாமனல்கு
மைக்கார் முகிலனையான் சசிவர்ணன் வளர்குளந்தை
யக்காவுலாவுமளி காளிங் காரு நடுநடுங்க
விக்கானிடந் தனிற் றும்பி வெம்பூசல் விளைப்பதன்றே. 341

நீவி கொண்டார் குருந்தேறி நின்றோனின்று நூற்றுவர்தம்
மாவி கொண்டோன் சசிவர்ணன் குளந்தை யளியினங்காள்
வாவி கொண்டோர் மலர்ச்சோலையில் வாழ்க்கை மறந்துகுழல்
காவி கொண்டீர் நல்லணியிழை யாரையுங் கைவிடுத்தே. 342

ஒரு பூவுறை மங்கை யம்புயத்தான் றிரையோங்குகடற்
றருபூப்புரக்குஞ் சசிவர்ணராசன் தமிழ்க் குளந்தை
வரு பூமணி கொண் டீரகண்டீர் வண்டுகாண் மருங்கே
இரு பூரணகும்ப மேந்தி நின்றீரிங் கதிர் கொள்ளவே. 343

ஏவும் வளிமன வேகமும் மின்னிட வேழ்கடலுந்
தாவும் பரிவரும்வேள் சசிவர்ணன் தமிழ்க்குளந்தைக்
கூவுங்குயின் மொழி கூந்தலினீரரண் கொண்டுவண்டீர்
மேவுங் கிரியா ணிமமருங்கே கைவிடுவதன்றே. 344

நேரிச மேந்திவெம்பாய்மா நடத்து நிருபனருள்
காரிசமானன் குளந்தைச் சசிவர்ணன் கார்வரையின்
பாரிசமாமலர்ப் பூங்குழற்கே பட்சம் வைத்து வண்டீர்
வாரிச மேந்திய மின்னிடத்தே பகை வைப்பதன்றே. 345

வேரித்தடங் கொள்குளந்தைச் சசிவர்ண வேந்தன்வெற்பி
லீரித்த காவிலளியவரே யிங்கிராத தென்னோ
பாரித்து விம்மிப் புளகித் திறுகிப் பணைத்தெழுந்து
பூரித்த கொங்கைக் கொடியிடை சேர்துயர் போக்குதற்கே. 346

பரித்தருண்மால் சசிவர்ணன் குளந்தைப் பங்கேருகத்திற்
றரித்தருண்மான்குழல் வண்டீரிடையிற்றளர்ச்சி வைத்தீர்
பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தாற் பிரித்தவுடன்
பொருத்தலும் வல்ல தமைச்சல்லவோ சொல்லும் பூண்டெமக்கே. 347

ஏங்காம னம்மை பெறக் கவி வாணருக் கீகையென்றுந்
தாங்காமனல்குஞ் சசிவர்ணராசன் றமிழ்க் குளந்தைப்
பாங்காமன் பைங்கிளி கூந்தலின்மேற் பண்பகர் வண்டுகாள்
பூங்காமனாரென்னவோ கொம்பனாருடன் போர்செய்வதே. 348

நூறூறு மெண்ணெண் கலைபயில் வாணிசொல் நல்லதமிழ்ப்
பாலூறுமஞ்செவி மால்சசிவர்ணன் பகர்குளந்தைக்
காலூறு தேனிற் கருந்தேன் கண்டேம் வண்டுகாள் கமலப்
பூவுறு தேனிடை கோற்றேன் கண்டானற் புதுமையுண்டே. 349

அஞ்சத்தடம்புடை சூழ்தென் குளந்தைக் கருளமுத
புஞ்சத்தடஞ் சசிவர்ணன் பொருப்பிற் புகலரிய
நஞ்சத்தடங் கண்ணி கூந்தல் வண்டீர் நல்லதிசயங்காண்
கஞ்சத் தடத்திடை தோயாமற் கானகங் கைக்கொண்டதே. 350

வாங்குஞ் சிலைக்கொடி வேந்தன் ரவிகுல மன்னன்றென்ன
னோங்கும் புகழ்ச்சசிவர்ணன் குளந்தை யுயர்வரைவாய்
பூங்குவ ளைக்குழல் வண்டீர்கண் டீர்பொன்னி புண்டரிகந்
தாங்குகொடி யொன்று கொண்டால் வளவன் சரியென்பரே. 351

செய்தருமப் பயிர் வாடாதுலகினிற் செம்பொன் மழை
பெய்தருண்மால் சசிவர்ணன் குளந்தைப் பிறங்கலின்வா
யெய்தவரும் வண்டினங்காளணி யிழை யீர்ங்குழன்மே
னெய்தலிலே குடிவந்தீரிடைச்சியர் நேசம் விட்டே. 352

ஊன்றிய கீர்த்திக் குளந்தைச் சசிவர்ண னோங்கும் வெற்பிற்
கூன்றிரு வெண்பிறை வாணுதற் கோமளக் கொம்புலவும்
வான்றிகழ் கார்க்கடன்மேன் வாலவாய்தனில் வந்தளிகா
டோன்றியும் பேதகஞ் செய்தீர் மலயத் துவசரையே. 353

முதுமை கண்டார்சொல் குளந்தைச் சசிவர்ணன் மொய்வரையிற்
பதுமை கண்டாசைகொ ளாருயி ரோவியப் பாவைகொண்ட
விதுமை கண்டீருங்கள் வாவிக்குண்டோ மன மேவளிகாள்
புதுமை கண்டீரிரு கோங்கரும் பேந்திய பூங்கொடியே. 354

கணுத்தான் களைமுத்தமீனுங் குளந்தையர்காவலன் பொன்
மணுத்தான் புலவர்க்கருளுஞ் சசிவர்ண மன்னன் வெற்பிற்
செணுத்தாவெனுங் குழல்வண்டீர் கண்டீரில்லைச் சிற்றிடையா
மணுத்தானிரு மகமேரு வைத்தாங்கு மதிசயமே. 355

நந்துற்ற முத்தங் கலைவாணி மூக்குத்தி நண்ணும்வயன்
முந்துற்றதென் குளந்தைச் சசிவர்ணன் முகில்வரைவாய்க்
கொந்துற்ற கூந்தலி னம்மனையாடிக் கொண்டே வண்டுகாள்
பந்துற்ற நூலைப் பிரித்தீரதிசயம் பார்த்திலமே. 356

காலத்தில் வந்தபுயல் போலிமையவர் கற்பகம்போல்
ஞாலத்தில் வந்த சசிவர்ண ராசனவில் குளந்தை
கோலத் திருவளர் கூந்தல் வண்டீர் மணங்கொண்டு மகிழ்
வாலத்தியேந்திய நேரிழையாரைக்கண் டன்புறுமே. 367

கைநாகங் கோடிபரிகோடி கட்டுங் கனமுன்றிலான்
பைநாகணை நெடுமால் சசிவர்ணன் பயில் குளந்தைச்
செய்நாக முத்தநகைப் பொன்னிடையின்றிச் சேர்வண்டுகாண்
மைநாகம் பெற்றிருந்தீர் கடலாகவும் வாழ்த்துதற்கே. 358

உன்னூரென்னூரென்றெவருஞ் சொல்லாதுள்ள வூர்களெல்லாந்
தன்னூரெனப் புரப்போன் சசிவர்ணன் றமிழ்குளந்தைப்
பொன்னூர் கமலவதன மின்னாள்குழற் பூவளிகாள்
தென்னூரிடையிற் கைத்தீர் சிரபுரஞ் சேர்ந்து கொண்டே. 359

நாடுங் கடலுமலையு மரியர னார்மயங்க
நீடும்புகழ் குளந்தைச் சசிவர்ண னெடுங்கிரியி
லாடும்படி யிடைவாட்டங் கண்டீரிலை யாவலினாற்
கூடும் பலநிறை கொண்டீர் வடீருங்கள் கொள்கை நன்றே. 360

தாண்டும் பரிகட்டிக் கோலால் விசயன் றனித்தடந்தேர்
தூண்டும் வலவன் குளந்தைச் சசிவர்ண துங்கன் வெற்பிற்
நீண்டு மதிநுதற் கூந்த லகப்பொரு டோர்ந்துமிடை
வேண்டுந் துறைகண்டறியீர் வண்டீரவ் வெறிவிலக்கே. 361

திரவிய மேபொழி மேகஞ் சசிவர்ண தீரன்மகி
ழுரவியமான குளந்தை வண்டீரிவ ளொண்குழன்மேற்
பரவிய சாமமுந் தானமுங் கொண்டு பகரிடைக்கே
விரவிய பேதமுந் தண்டமுஞ் செய்வது மேன்மையன்றே. 362

சேலேந்து வாவி புடைசூழ் குளந்தை சிறந்தருள்செங்
கோலேந்து சிங்கஞ் சசிவர்ண ராசன் குளிர் சிலம்பின்
மாலேந்து கூந்தல் விடுத்து வண்டீர் மறைவாய் விரும்பி
நூலேந்திடவுங் கண்டாற் றொழுவேனுமை நோக்கி நின்றே. 363

புரக்கும் புவிக்கிந்திரன் சசிவர்ணன் புகழ்க் குளந்தை
வரக்கும்ப மாமுலையாள் குழன்மேவும் வரிவண்டுகாள்
பரக்கும் பெருஞ் செல்வமுற்றோரக்கமிப் பானடுவே
கரக்குமெனிலெப் படியாந் தலைமை கருதுவதே. 364

மீதலமேழ் புவிவீசிய கீர்த்தி விளக்கு சசி
காதலன்றென் குளந்தைச் சசிவர்ண கனகிரிக்கே
மாதலர் கூந்தல் வண்டீர் கொம்பிலாக் கருமாவெனவே
பூதலமுற்று நுங்காலாலுழுத புதுமை நன்றே. 365

உடுபதியான குளந்தைச் சசிவர்ண னோங்கும் வெற்பில்
வடுவகிர் மைவிழி கூந்தல் வண்டீர் செறிமான் மதந்தான்
விடுமுயற் வேழமுந் தும்பியுங்கூடி வெம்போர் புரிய
நடுநின் றவரையுங் கண்டஞ்சினேனிங்கு நான்மிகவே. 366

குனிதருவிற் கொண்ட நாண்செறித் தண்டங் குலுகுலுங்கத்
தொனிதரு ராமன் குளந்தைச் சசிவர்ணதுங்கன் வெற்பி
லனிகருங் கூந்தலின் வண்டினங் காணல் லமுதனமாங்
கனியிடை நீங்கள் பொருத்திலன்றோ சொல்வர் கண்ணனென்றே. 367

விக்கிக் குதட்டிக் கடைவாயிற் பாலுகமேதிகடின்
றிக்கிற் குலாவுங் குளந்தைச் சசிவர்ண ணெண்சிலம்பிற்
கக்குச் செந்தேனுமிழ் வண்டீர் பொன்மான் முடிக் கண்ணியிலே
சிக்கிக் கொண்டீர் மருங்கே பறந்தோடத் திடமன்றியே. 368

கிட்டும் புவியுங் கடலு மலையுங் கிளர்விசும்பு
மெட்டும் புகழ்கொண்ட மால் சசிவர்ணனிசை குளந்தை
மட்டுஞ் செந்தேனும் பயிலளிகாளம் மருங்குல் கண்டு
மொட்டும் பறவையும் போல நின்றீரிவ ளொண்குழற்கே. 369

மாப்போல் விளங்கு பலாப்போ லுதவியிம் மாநிலத்தான்
காப்போன் சசிவர்ண ராசன் குளந்தைக் கனகிரிவாய்ப்
பூப்போல் விழியிடைகண்டுஞ் சொல்லாமற் பொருந்தியதே
னீப்போற்சுழன்று துவண்டீர் வண்டீரிவளீரங் குழற்கே. 370

அராமிசை யேறிச் சிலைவாங்கிநாண் செறித் தம்பொன்றினான்
மராமரமெய்த சசிவர்ண ராசன் வளர் குளந்தை
விராவிய முல்லையு நீலமுங் காமர் விளைந்தளிகா
ளிரா முழுதுங் தொடுத்தாலென்படா தென் னிளங்கொடிக்கே. 371

இருகோடொடித்து மதயானை முன்னின்றிகலி வென்றி
னுருகோவனைய சசிவர்ண ராசனுயர் குளந்தை
வருகோதை சூடிக் கொடுத்திடு மாலைமகிழ்ந்து மணந்
தருகோலப் பூங்கொடி கையிழந்தீரரி தானென்னவே. 372

ஆலுக்கு மேற்கொண்டவன்றுயில் கூரவணிபெறுசெங்
கோலுக்கு வாய்த்த துரைச் சசிவர்ண குளந்தை வெற்பில்
வேலுக்கு நேர்கண்ணி கூந்தல் வண்டீர் சொல்விளங்கியநன்
னூலுக்குக் காப்பன்றியே நிலையேது நுவலுங்களே. 373

அங்கங் குலுங்கக் கவந்தனைவாள் கொண்டடர்த் தருளுஞ்
சிங்கங் குளந்தைச் சசிவர்ணராசன் சிலம்பிடத்திற்
புங்கங்கொள் கண்ணிமைக் கூந்தல்வண்டீர் பொருமாலென்னவே
சங்கங் கொண்டீரிம் மருங்கே திகிரியுந் தாங்கினன்றே. 374

நிலவும் புகழ் சசிவர்ணன் குளந்தை நெடுவரைக்கே
யிலவுங் கனியுங் கனியிதழ்க் கோதையிலெய்தும் வண்டீ
ருலவு முறிகொளும்புத் தரைவாதில் வென்றோட்டுதற்குக்
குலவுங் குலச்சிறை யாலல்லவோ பகை கூடியதே. 375

அலைமலையாற்கவி கொண்டடைத் தோனம்புவி நிறைந்த
கலைமதிபோலுங் குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவா
யிலைமலி வேற்கண்ணி கூந்தல் வண்டீரிட்டிடையறிந்து
நிலைமை விடாதிருந்தீரும்மைப் போலில்லை நீணிலத்தே. 376

பாரைமருவு புயத்தான் சசிவர்ணன் பைம்புயல்சூழ்
சீரை மருவிய சோலை வண்டீர் செறிந்திம் மருங்கே
போரை மருவு மிருவரை நோக்கிப் பொருந்து குழற்
றாரை மருவு கொழுநனையே விடத் தக்கதுண்டே. 377

நள்ளார் சமரிற் கரதூடணாதியர் நாமமுடி
கொள்ளாண்மை ராமன் சசிவர்ண ராசன் குளந்தை வெற்பிற்
புள்ளாருஞ் சோலைக் குழலளிகாளென்ன புத்தி கொண்டீர்
கள்ளாசை கொண்டு கரும்பனையாரிடை கைவிடவே. 378

பூமனிவன் செயுநீதியிற் போரிற் பொருந்தியுந்தன்
மாமனுவிந்த சசிவர்ணராசன் வளர் குளந்தை
காமன்குழலி லளிகாள் கதையிலுங் கண்டதுண்டோ
வீமன்றருமரை யேபகை யாக்கி வெறுக்கின்றதே. 379

சூரத்துடன் வருதடக்கை மார்பைத் தொளைத்து வென்ற
வீரத்துரை நம் குளந்தைச் சசிவர்ணன் வெற்பிடத்திற்
பாரத்துணை முலைகூந்தல் வண்டீர் பசுங்காவகத்திற்
கோரத்துடன் மந்திபாயுங் கொல்லோவொரு கொம்பிழந்தே. 380

வட்டமிடும் புவிவேதியர்க் கன்னம் வழங்கியென்று
மிட்டமுதவுஞ் சசிவர்ண ராசனெழிற் குளந்தை
கொட்டமிடுங் குழல் வண்டீர் பிடிக்குங் கொடியன்றியே
பட்டமுங் கட்டி மணிமுடிதோயும் பரிசு நன்றே. 381

திடத்தை மருவு விராதனிருபுயஞ் சிந்த வென்றோன்
றடத்தை மருவு குளந்தைச் சசிவர்ணன்றன் சிலம்பிற்
குடத்தை மருவு குவிமுலையாண் மலர்க்கூந்தல் வண்டீர்
விடத்தை மருவி யமுதிடை நீங்கள் வெறுத்தனன்றே. 382

குழைக்கானவள்ளை குதட்டி நின் றாவினங் கூட்டமிட்டுக்
கழைக்கானுலாவுங் குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவா
யுழைக்கான கண்ணிகுழல் வண்டுகாளிவ் வுலகிலுண்டோ
மழைக் காலிருட்டினின்மின் வெட்டிலாமல் வழங்குவதே. 383

கலந்தங்கு கங்கைக் கரையிற் குகனைக் கருதிநட்பு
நலந் தந்தமால் சசிவர்ணன் குளந்தை மின்னாள் குழன்மேற்
புலந்தந்த வண்டினங்காணறு நீலத்திற் புண்டரிக
மலர்ந் தங்கிருப்பக் கண்டோங் கொடிதான் மிகவாடுதற்கே. 384

பணிக்கும்படியன்றி வந்தெதிர்த் தோரைப் பதைபதைக்கத்
துணிக்கருங் கொல் யானைக் குளந்தைச் சசிவர்ண துங்கன்வெற்பின்
மணிக்கும்ப மாமுலை யாள்குழன்மேவும் வரியளிகாள்
கணிக்குங் கமலத்திடை நீக்கி யாம்பல் கருதனன்றே. 385

போர்முக மாயெதிர் மூலபலத்தின் புணிரியெல்லாங்
கார்முகத்தால்வெல் குளந்தைச் சசிவர்ணன் கார்வரைவாய்
வார்முகந் தங்குங் குவிமுலையாள் குழல் வடினங்கா
ளோர்முகமாய் வந்திருக்கிலென்னாமிவ ளொல்கிடையே. 386

தேகியென்றே வந்தவர்க்குக் குபேரன் சிறப்பு நல்கும்
யூகிச் சசிவர்ணராசன் குளந்தை யுலாவளிகாள்
கோகிலமென்மொழி சிற்றிடை யார்த்துக் குழலைவிட்டுப்
போகிலன்றோ வப்பெயர் தானுமக்குப் பொருந்துவதே. 387

துறையொன்றிலே கவிநானூறு கொண்ட வுத்துங்கன் மன்னர்
திறையொன்று முன்றிற் குளந்தைச் சசிவர்ண தீரன்வெற்பி
னறையொன்று கூந்தலளியினங்காண் மிகுநன்மை கொண்டீர்
குறையொன் றிடையி லுமக்கேது வந்தது கூறுங்களே. 388

உறுநாட்சமரிலி ராவணன் றன்னை யின்றூருக்குப்போய்
மறுநாளில் வாவென்ற மால்சசிவர்ணன் வளர்குளந்தைப்
பெறுநாண் மலர்க்குழன் மேவளிகாண் மதன் பெற்ற வென்றிச்
சிறுநாணுமக்கவன் கைச்சிலையோ விவள் சிற்றிடையே. 389

கொடை நட்புக் கொண்ட சசிவர்ண ராசன் குளந்தையில்வேற்
படைநட்புக் கொண்ட வரிவிழி மேவு பைங்கூந்தன் மலர்த்
தொடை நட்பளியினங் காண் மருங்கொல்கிய சூட்சிகண்டு
மிடைநட்பிது வென்றறிந்தோ தலைநட்பிணங்கியதே. 390

சேகைத்தரு கும்பகர்ணன் சிரங்கடல் சேர்த்த வென்றி
வாகைப்புயன் றென்குளந்தைச் சசிவர்ண மன்னன்வெற்பிற்
பாகைப் பொருநறைக் கூந்தலிலே பண்பயில் வண்டுகா
டோகைக் குடையினி லெய்தியதே பட்சி தோஷங்களே. 391

விரும்புயர் வென்றிக் கவிகேதனங் கொண்டவேந்தன் றெல்லைப்
பொரும்புய துங்கன் குளந்தைச் சசிவர்ண பூபன் வெற்பிற்
றிரும்பிய மான்விழி வண்டீரிடைக் கொருதீங்கரும்பாய்க்
கரும்பிரச வடிவாகி நின்றீர்மின் கருங்குழற்கே. 392

முழங்குமிலங்கைப் பெருஞ்செல்வம் வீடணன்முன்புபெற
வழங்கிய ராமன் குளந்தைச் சசிவர்ண மன்னன் வெற்பிற்
றழங்கருவித்தட நாட்டேனிடைவிட்டுத் தாகமதாய்ப்
பழங்களை வேண்டி வந்தீர் வண்டுகாண் மலர்ப் பைங்குழற்கே. 393

தேவையிலீசரிரு தாளிலர்ச்சனை செய்து வந்த
தேவைநிகர் குளந்தைச் சசிவர்ணன் சிலம்பிலுயர்ந்
தேவையயில் விழியாள் கந்தமாதளஞ் சேர்மருங்கே
தேவையுற்றேயளி காடனுக் கோடியுஞ் சேர்கைநன்றே. 394

புவிக்குளயோந்தியிற் பட்டாபிஷேகம் புனைந்துமுடி
கவிக்குங் குளந்தைச் சசிவர்ண ராசன் கனகவெற்பிற்
குவிக்குங்கும முலையைச் சுமந்தெய்த்துக் குழல்வண்டுகா
டவிக்குமிடை கண்டுமென்னோ பறப்பிலைத் தானுமக்கே. 395

இயல்சேர் குவளைச் செந்தேனுமுஞ் சால்வழி யேபெருகும்
வயல்சேர் குளந்தைச் சசிவர்ணராசன் மணிவரைவாய்ப்
புயல் சேரளியினமே கொண்ட கோங்கரும்பும் புதிய
கயல்சேர் மதியமுஞ் கண்டொல்கு பூங்கொடி கண்ணுற்றதே. 396

மாமலர் மார்பன் சசிவர்ணராசன் வளர்குளந்தைக்
காமரு வண்டினமே செறிகூந்தல் கருதுவதென்
றாமரையோகடலோ மலையோ நின்று தாங்குங்கொல்லோ
பூமலிதேவர் விசும்போலிடமினிப் பூங்கொடிக்கே. 397

நாமேவு மின்னிசைசேர் சசிவர்ண னவில் குளந்தை
யேமேவு மங்கையிவள் மலர்க் கூந்தல் வண்டே செறியப்
பூமேல் வருசிற் றடிதோய மைக்கண் பொருதிமைப்ப
மாமேவு பூண்முலையேந்தி யன்றோ நிற்கும் வல்லியன்றோ. 398

தொடிமேவு தோளியர் வேள் சசிவர்ணன் றுதிகுளந்தைக்
குடிதேன் விரும்பி மருவும் வண்டே தருகோதை மைக்கண்
வடிவா ரமுதம தாகப்பெருக வளருமொரு
படிபாதி நஞ்சமுமாகப் பிரமன் படைத்தனனே. 399

திருவாழியொன்று கவிக்கருள்வோன் முச்செகம் பரவ
மருவாழி யேந்திய மால் சசிவர்ணன் வளர் குளந்தைப்
பொருவாழியன்ன விழியாள் குழலிற் பொருந்தளிகா
ளுருவாழி வாழியென்றே மிக வாழ்த்து மின் னொல்கிடைக்கே. 400

முற்றிற்று

# கீழ்வேளூர், குருசாமி தேசிகர் செய்த
# திருவாரூர் வெறி விலக்கல் ஒருதுறைக் கோவை

திருவருள் பெற்றிடு மாரூர்த் தியாகசிந் தாமணிமேல்
ஒருதுறைக் கோவை யுரைக்கத் தருமனம் புத்தியென்ப
பெருகுங் கமலா லயத்திற் பரவைப் பிராட்டிக்கன்பர்க்
கருளும்பொன் மாற்றுரை யானை முகத்த னடியிணையே. 1

வாய்மையைக் கொண்டகந் தூய்மைசெய் வோர்நிறை வண்கமலைக்
கோமையைக் கொண்ட மிடற்றோன் கொடுத்த கொடுமையல்பீர்
மாமையைத் தந்தொரு சீர்மையி லாத்துயர் வாரிதர
வாமையைக் கொன்றெவ னாவது கூறுதி யாயிழையே. 2

கூனிக்கு வேண்டலன் காணாத பாதமென் கோகனக
ஞானிக் ககங்கையி னெல்லியிற் காட்ட நயந்தவர்செந்
தேனிக்கு மானுஞ்சொல் பாகர் கமலைத் தியாகர்செய்மா
லானிக்கென் றோவிந்த வாடிக்கு மேல்வந்த தாயிழையே. 3

வெறுப்பு விருப்பென் றிரண்டுந் தவிர்த்தமெய்ஞ் ஞானியர்த
முறுப்பு முதலிய வானோன் கமலை யொருவன்மென்றோண்
மறுப்பின் மனத்தன்பர் மாலிருள் சாமையை வந்துவலிந்
தறுப்பின் விடியுங்கொல் லோவறி யேனிஃ தற்புதமே. 4

எண்ணுக்கு ணெய்யென வெங்குநின் றோனிமை யாசலத்துப்
பெண்ணுக்குப் பாகங் கொடுத்தோன் கமலைப் பிரான்வரைமேற்
கண்ணுக்கு மைகொணர் வாருளர் வாளியிற் காமனெய்த
புண்ணுக்கு மைகொணர் வாருமுண் டோமடப் பூவையரே. 5

ஓட்டைக் குடப்புனல் போலாயுள் போகுமு னொண்மலர்தூய்
வீட்டைப் பெறுமவர் சூழ்கம லாபுரி வேந்தர்தந்த
கோட்டைக் கடந்தவென் மாற்கங்கி தாங்கிக் குலவவல்ல
வாட்டைப் பிடித்துக் கிழிக்கவென்றி யாவர் வகுத்தனரே. 6

விண்ணுக் கொருமருந் தாரூர்த் தியாகரை மேவவந்த
புண்ணுக் கொருமருந் தாவது கூடல் புரப்பவடன்
கண்ணுக் குவமை பசுபதி யென்னக் கழறிவைநாப்
பண்ணுக் கிறுதி புரிவதென்றி யாவர் பகர்ந்ததுவே. 7

போராட்டை யேசெய் புலம்வென்று காட்சி புணர்பதினா
றாராட்டை யந்தண ராதியர்க் காக வசபையென்னு
மோராட்டை நன்றரு ளாரூரர் மார்ப முதவியமாற்
கீராட்டை யென்றுநின் றாயன்னை யென்னைகொ லிவ்விடத்தே. 8

ஒல்லார் புரமொரு மூன்று மரிக்கனை யுய்த்தெரித்த
வல்லாளன் செல்வ மலிகம லாலய மாநகரா
ரெல்லாரும் வாழ வுறைவா னெனையினி தென்றருளச்
சொல்லா டடமதிகொண் டாவதென் னன்னை சொல்லுகவே. 9

பேரெச்ச மாக்கி வினையெச்ச நீக்கும் பெரியர்கடாழ்
பாரெச்ச மேவிய பார்த்திபன் வாழ்த்து பதாம்புயத்தை
யீரெச்சம் வாழ்த்துதென் னாரூரர் மார்பக மீவதொளி
யோரெச்ச மூர்வதைக் கோறலென் றன்னை யுணர்ந்தனளே. 10

முளைப்புக் கனந்தந்த மூதறி வாளர் முளரியங்கட்
டிளைப்புக் கெதிர்ந்ததென் னாரூர்த் தியாகர்செந் திண்புயமாந்
தளைப்புக் ககன்றிட வோரிட மின்றித் தவிக்குமிந்த
விளைப்புக்கந் தோவிவ ணம்மையைக் கோற லியல்பல்லவே. 11

உறியடி செய்தளை நெய்மாந்தி னோன்முடி யொண்டுளவின்
வெறியடி வீதி திகழ்கம லாபுரி மேவியுள்ளாள்
சிறியடி யாகரைச் சேவித் தவளெனச் சிந்தைசெய்வாண்
மறியடி யென்னநின் றாளன்னை யென்னை வசனிப்பதே. 12

எறுப்பு முதலிப மீறா முயிர்களை யேன்றருளப்
பொறுப்புள் ளவரெங்க ளாரூரர் தம்புயப் பூம்பொருப்பென்
மறுப்பின் மதிகொள வன்னையென் பாளின் மதியடங்காக்
கறுப்பு:நிறீஇவெள்ளை மாய்ப்பது காணக் கருதினளே. 13

திண்ணார் மதில்புடை சூழ்கம லாபுரிச் செல்வரிடம்
பெண்ணால் விளங்கச்செய் பெற்றியுள் ளார்மதன் பெய்கணையாற்
புண்ணான நெஞ்சமும் போகாப் பசலையும் போகுமென்றோ
கண்ணா டிதனைச் சிதைப்பது போலுங் கனங்குழையே. 14

தன்மை யிறுதி யறமுன் னிலையும்பர் தானவர்சூழ்
பொன்மை யுறுவரை வாயம ராரைப் பொருதழிக்கும்
வின்மை யுறவைத்த வாரூரர் பூம்புய மீதுமிக
வன்மையி னெஞ்சம் படர்க்கையென் றாங்கொலிவ் வையகத்தே. 15

இல்லாடன் கொங்கைக் கிளகுசிந் தாமணி யீர்ங்கமலை
நல்லாளன் புற்றணி சூளா மணிபொரு ளாகமுறை
யெல்லாரும் போற்றிய வாரூ ரிறைதந்த விம்மயலிக்
கல்லாடந் தத்தை யுறுபாவ மெங்ஙனங் காண்பதுவே. 16

பாடக மெல்லடி யாளருட் பாவை பரியமன்று
ணாடக மாடெங்க ளாரூர்த் தியாகர் நயந்தணிந்த
வேடகங் கொண்டொளிர் செங்கழு நீரினை யிச்சித்ததற்
காடகங் கோடிநம் மன்னையி னாலழி வுற்றதுவே. 17

ஓரடி யாலுல கெல்லா மளந்தவ னொத்தவளி
யாரடி யார்தொழு மாரூ ரிறைவருக் காசைகொண்டேற்
கீரடி மூவடி யாதிய வெள்ளை யிருக்கவந்தோ
சீரடி நான்குள்ள வெள்ளையை யன்னையென் சேதிப்பதே. 18

ஆடிய கிண்கிணித் தாளார் கமலை யதனைநின்று
கூடிய வெண்ணிய வென்பொருட் டாக குகன்மகிழ்ந்த
சூடிய செச்சை யிருப்ப வவனைச் சுமக்குமொரு
பீடியல் செச்சை யுயிர்போ யொழியுமிப் பெற்றியென்னே. 19

வண்டோ லிடுபொழி லாரூர்த் தியாகர் வரையெனன்பர்
திண்டோ டரும்பெருங் காமா னலத்தினிற் சிந்தைவலி
விண்டோர் கணமுக மாகத் துயரம் விளையுமிப்போ
துண்டோர் வுரையசஞ் சாட நினைப்ப தொளியிழையே. 20

பிறந்தவர் பின்னர்ப் பிறவா நெறியிற் பிறங்கவைத்துச்
சிறந்தொளிர் கின்றதென் னாரூரர் மார்கழித் திங்களந்தா,
ளறந்தரு சிந்தையர்க் காதிரை நாளி லருளுவர்செந்
நிறந்தரு மோவிந்த வெள்ளையை மாய்க்கு நெறியிதுவே. 21

குடக்கியல் வெய்யவன் வாராமை நீக்கக் குறித்ததுபோ
லிடக்கிய நன்றசை யாரூர்த் தியாக ரினிதருளிச்
சடக்கென வந்து தழுவிக் கொளாது தணந்தவெதுப்
படக்கி மகிழ்ச்சி தருங்கொற் றகரை யழிப்பதுவே. 22

தலைப்படு சால்பினர் யாரையு மென்றென்றுந் தக்கதொரு,
நிலைப்பட வைத்தநம் மாரூர்த் தியாகர் நிதிமயமா,
மலைப்படு தோளின் விளைந்தபொல் லாதவென் மையலிதன்
றலைப்படு காரணம் யாதுகொல் லோசொல்லு தாழ்குழலே. 23

நீப்பா ரயின்றவ னெஞ்சமென் றாமரை நீங்கலில்லார்,
போர்ப்பார் களிற்றுரி யாரூர்த் தியாகர் புயத்திலென்னைச்
சேர்ப்பா ரிலர்தனிச் செட்டிதன் வாகனந் தீரும்வகை
பார்ப்பா ருளரிந்தப் பாதகம் யார்க்கும் பகர்வரிதே. 24

பற்றொழி நெஞ்சினர் பற்றுங் கமலைப் பதிமிளிரும்,
புற்றொழி யாதவர் வீதி விடங்கர் புயமிருக
ணுற்றொழி வின்மயல் கொண்டிளைத் தேனுக் கொளியிழையோ
ரொற்றொழி யச்சங் கெடவொழி யாவச்ச முற்றனனே. 25

பல்ல வளமலி யாரூர்த் தியாகர்ப் பவளவரை
வெல்ல வளர்புயச் செங்கழு நீர்த்தொடை மேவவந்த
வல்ல லிதற்கிந்த மால்வரை மேலுள்ள வந்தகரைக்
கொல்ல நினையுங் கொடுமையை யாரொடு கூறுவதே. 26

பாயச நீயடல் பாதக மாகுமென் பாட்டினுக்கு
மேயசம் பாவனை யாவது கேளன்னை மெல்லியலார்
தூயசங் கீதமுந் தொன்மறை யோசையுந் தொன்றுதொட்டு
வாயசெம் பொன்மதி லாரூர ரைச்சென் றணைவதுவே. 27

முத்த ரகத்து முடியா மறையின் முடியிடத்து
நித்த நிலவிய வாரூர்த் தியாகரை நெஞ்சினிடை
வைத்த விளமட மாதருக் காக வரையின்மரு
வித்தக ரையட மேயது நூலின் விதியல்லவே. 28

குலைப்பால் வளைமுத் துயிர்க்குங் கமலையெங் கோவமுத
வலைப்பான் மதியணி யண்ணறன் மார்ப மணுகப்பெறா
வலைப்பான் மடப்பிணை போன்றே னெனக்கிந்த மைதவழு
மலைப்பா தகரை யலைப்பது சாலு மடவியரே. 29

நீரச வுண்டி யயின்று பொடியிடை நித்திரைசெய்
வீரச னம்பணி யாரூர்த் தியாகரை மேவுகிலா
தாரச னந்தி துறந்திளைத் தேற்கிவ் வணிவரைவாய்
சாரச வாவியை மாய்க்கலுற் றாள்பெற்ற சத்துருவே. 30

தீயச ரோருக மாதிய கொண்டு செயிர்த்துமத
னேயச மானமில் போர்க்கிளைத் தேனிதற் கேந்திழையே
யாயெச மானெங்க ளாரூ ரிறைவ னணிவரையின்
வாயச மோபிணை பட்டது சால மதிப்பினன்றே. 31

நிறைமை யுததி நடுவா ரிலங்கை நிகழ்பவருக்
கிறைமை யடிதொழு வீடணற் கீந்தவற் கின்பருணஞ்
சுறைமை மிடறுற்ற வாரூர்ப் பிரானை யுதவுதலே
முறைமை யடுமொரு பாதக மாயின் முறையல்லவே. 32

கஞ்ச மலர்மிசைக் கன்னியர் பூசைகொள் காமரருட்
புஞ்ச வளமலி யாரூரின் மேவு புராதனர்முன்
றஞ்ச மருள்கவென் றான்மெல் லுடம்பு தணந்திருந்த
வஞ்ச மடநினைந் தாளன்னை யென்னை யறைகுவரே. 33

தண்மை நறும்புனல் பெய்தலர் தூவிய தன்மையர்க்கு
வண்மை தருதிரு வாரூர்ப் பிரானருண் மையலிதே
னுண்மை யறிகிலை யோகெடு வாயன்னை யுற்றதொரு
பெண்மை கடைப்பிடித் தாடுசெய் வாயிது பேதமையே. 34

நித்த மறாதலர் தூவிப் பராயநன் னெஞ்சருக்கு
வித்த மறாதரு ளாரூர்த் தியாகரை மேவுதலே
வுத்தம மாமது செய்தியவ் வாயிங் குறுமமைவின்
மத்திம மாயப் பதம மதனை மறந்துவிட்டே. 35

ஓதக ராதி யுணர்ந்து திவாகர னொத்தொழிந்த
சூதகர் வாழ்த்துதென் னாரூர்த் தியாகர்தந் தோண்மலர்த்தார்
தாதக ராகந் தணித்திகண் டாயினித் தாழலன்னாய்
போதக ராவியைப் போக்கா தொழியுண்டு புண்ணியமே. 36

பொன்னை நிகர்திரு மேனியின் மேற்கருப் பூரமிக்க
வென்னை வளமலி யாரூ ருறையு மிறையணிதார்
தன்னை யருளிங்கு தாமதி யேலெனத் தாழ்ந்திரக்க
வன்னை யசமந்த மாயிருந் தாணன் றழகியதே. 37

மேயசம் பாவன மாகா திதனை விடுதியன்னாய்
சாயக மாய்விடை யாய்மனை யாகித் தயங்கொருவன்
வாயக மௌலியின் மன்னுங் கமலைநம் வாழ்வுதில்லை
நாயக மாகு மதனையெவ் வாறிவ ணண்ணுவனே. 38

போரே றுயர்கொடி யேந்துவ தாழியம் பொற்சிகரத்
தேரே றுவதுதென் னாரூரில் வாழ்வது சென்னிமிசை
நீரே றுவது தருமயற் கிந்நெருப் பேறுவது
வாரே றிளமுலை யாய்வந்து மாய வழக்கில்லையே. 39

சேலாம் பழனமுஞ் சோலையுஞ் சூழ்ந்து திகழ்புவியின்
மேலாந் தலமெனு மாரூர்த் திருநகர் வீற்றிருக்குங்
காலாந் தகரைக் கருதின தற்குக்கைய் யாந்தகரை
நீலாம் புதநிகர் கோதா யழிப்பது நீதியன்றே. 40

அஞ்சோ டசமலைப் பான்மனத் தெண்ணலென் னன்னைவெய்ய
நஞ்சோ டிருவிழிக் கேகாக மெல்லி நடவடிவா
நெஞ்சோ டியபத்தி பிண்டசய் யோகஞ்செய் நேசரிருண்
மஞ்சோ டியமிடற் றாரூர ரையுற்று வாழ்வெண்ணலே. 41

காளிக்கு நாண்டநந்த வாரூரர் கிண்கிணிக் காலர்வெற்பிற்
கேளிக்கு நேர்மொழி மாப்பிள்ளை வந்தெய்தக் கேடருந்தீ
வாளிக்கு மாய்சினப் பொங்கற்கு நையென் மதிமயலால்
கூளிக் கசத்தை யறுத்துள தோசத்தை கூறுவையே. 42

பலசட்டி பானை யுடைத்தரி வெண்ணெய் பரிந்தயின்றா
னலசொற் கவுணியர் பூங்குட மாய்த்தனர் நங்கைதந்தார்
சலசத் தடம்பணை யாரூரர் மாலை தராரரிதிக்
கலசத் தினையுடைத் தென்னைகொள் வாய்பயன் கார்மயிலே. 43

காலச னஞ்செய் தரைவற் கலைதற்றுக் கண்ணிமுக்காற்
கூலச லங்குடைந் தொன்றளி யாற்கை குவிப்பவர்தம்
மாலசன் மந்தவி ராரூரர்ப் பார்த்து மகிழ்வனிந்தப்
பாலச மாய்க்குமிப் பாதகம் பார்க்கப் பயந்தனனே. 44

வல்லார் முலைவஞ்சி பாலக லாதவர் மன்னுகலி
செல்லா நகருறை செல்வ ரடியவர்ச் சேரகவ
லெல்லா மொழிப்பவர் தாரரு ளாம விருப்பக்கொன்னே
நல்லா யுறுவெள்ளை மாய்க்கலுற் றாளன்னை நன்றல்லவே. 45

பூகா டவிமுகிற் பந்தரங் கால்களைப் போன்றிலங்க
வேகா னலமலி யாரூர ரீந்தவிவ் வாசையினா
லாகார நித்திரை யென்பதி லாதல மந்தவென்னை
நீகா தகரை யடலோ மடநடை நேரிழையே. 46

கோட்டா லடியிற் குருவடி வாகிக் கொழுநனினத்
தாட்டா ழடியர்க்குத் தத்துவ ஞானந் தனித்திருந்து
காட்டா வருளிய வாரூரர் சாந்தங் கமழ்புயமிந்
நாட்டா மையைவிடு நீநனி வாழி நறுநுதலே. 47

பொறிபடு பையர மீதே நடனம் புரிமுகிலை
வெறிபடு தாமரை மின்னோடெந் நாளு மிளிரச் செய்தோர்
நெறிபடு செஞ்சடை யாரூர்த் தியாகர்செய் நீங்கலின்மான்
மறிபடு மோவிந்த மந்திரத் தேசொல்லு வாணுதலே. 48

பாரச னைசெய் பவர்க்கா விரவிற் பரிந்திருகா
லேரச ரோருகத் தாணோவச் சென்ற விறைவர்துய்ய
நாரச வாவிகொ ளாரூரர் மாறவர் நன்மகலூர்
சீரச பங்கம் வருவது சாலச் சிறப்பல்லவே. 49

மைவெள்ளை நீருண்டு மாய்ந்தபின் கந்தர மான்மிளிரச்
செய்வெள்ளை மேனிய ராரூரர் தண்ணளி செய்தலது
மெய்வெள்ளை யாவு மழியா தெனவுன்னி மேவியவிக்
கைவெள்ளை யேனு மழிப்பனென் றோவன்னை கண்ணியதே. 50

அகர மெனவெங்கு மார்ந்தக லாதவ ராழியம்பொற்
சிகர விரத மகிழ்கம லாபுரித் தேவர்வெற்பின்
மகர முயர்கொடி யாற்கிரை யாய்நன்று வாய்த்தனன்யான்
றகர நமசிக் கிரையாய் முடியத் தலையெழுத்தே. 51

கடுமை தருவெயி றங்கி நிழறரு கார்ப்பொழிலி
னடுமை யுறவள ராரூர்த் தியாகர் நறுமலர்த்தா
ரடுமை வகைக்கணை பட்டுரு கும்புண்ணை யாற்றுதற்குக்
கொடுமை விடுவெனக் காகாதன் னாயிக் குணமொழித்தே. 52

மலைவெள்ளை நாண்மதி வார்சடையான்பொன்னி மாநதியி
னலைவெள்ளை முத்திறை யாரூர்ப் பிரான்மலை யம்புயத்தா
ருலைவெள்ளை மேன்மெழு கொத்தே யுளத்தை யுருக்குதற்கித்
தலைவெள்ளை யைத்துணி செய்வதுண் டோவன்னை சாற்றுகவே. 53

மந்தநன் மூரல் வதனாம் புயத்தர் மலையயில்வேற்
கந்த சுவாமி யுடன்கம லாபுரி காதலித்தோர்
தந்தபொல் லாத பசலையை மாற்றத் தடவரைவாய்
வந்தசு மாள நினைப்பினை யோகமிக மாசுறுமே. 54

பாரக மெங்கும் பிறந்து பலதவம் பண்ணிப்பண்ணிச்
சாரகந் தீர்ந்துதன் னாரூரிற் சென்று சனித்தவர்க்குச்
சீரக நல்கு திருவருண் மேவிய செட்டியப்ப
னோரக மேவநன் றேழக மாள்வதென் னோதுவதே. 55

என்னே யிதனுக் கியானென்ன செய்வலென் னேந்திழையாய்
பொன்னேர் வரைநிகர் கோபுரந் தெற்றி புரிசைசுற்றித்
தன்னே ரிகந்ததென் னாரூர்ப் பிரான்புயந் தாவெனலுங்
கொன்னே யுதடரை பட்டது காணிக் குவலயத்தே. 56

பொய்யல்ல விந்தப் பொருப்பிடத் தேயோர் புதுமைகண்டேன்
செய்யல வன்பெடை யோடூடித் தாமரை சென்றுதுயி
றையலி லஞ்சிநம் மாரூர்ப் பிரான்புயந் தானளித்த
மையன் மறிபட்ட தில்லை யெனலு மறிபட்டதே. 57

அகமொன் றழிந்த வறுமீன் புதல்வ னயிலயிலாற்
சகமொன் றியசிவ லோகமென் றியாருஞ்சொல் தண்கமலைச்
சுகமொன் றியமொழி பாலக லாதுறை தோன்றறன்றோ
ணகமொன் றியநசை யாலே ழகங்கெட னண்ணியதே. 58

பாவாய் பவமுறு பாக்கியத் தோர்கடம் பாசமறுத்
தோவாத வின்பரு ளாரூரின் மேவிய வொப்பொழிந்தான்
பூவார் குவளையம் பூமாலை மாலை பொழுதுநன்று
தாவாமை யாதி யிடைசெய்வ தீறு தவிர்வதுவே. 59

மின்னடுக் கொண்ட முகில்வெம் பகழியை மேருவென்னும்
வின்னடுக் கொண்டவ ராரூரின் மேவிய வித்தகர்தா
மென்னடுக் கந்தவிர்த் தானந்த வாரியி லெய்துவிப்பான்
கன்னடுக் கொண்டதர் வந்தது கொல்லயிற் கண்மயிலே. 60

கற்றா ரறிவிற் கடிமலர் தூவித்தங் கைகுவிக்கப்
பெற்றார் பிறவி யொழித்தாள் கமலைப் பிரானகையாற்
செற்றார் புரம்வென்ற செல்வத் தியாகர்தஞ் சேய்மைவிளி
யுற்றாலென் னண்பரி னண்மை விளிவந் துறுவதின்றே. 61

பூகா டவிசுற்று மிஞ்சியின் மஞ்சமர் பூங்கமலை
நாகா பரணர்நம் வீதி விடங்கர் நயந்தவெற்பி
லாகா வியங்கண்மை யந்த மிறைமொய்ம்பி னாரிலய
போகாதி காரந் தருவதுண் டோசொல்லு பொய்யொழித்தே. 62

தசமதி யானனத் தான்வரைக் கீழ்விழத் தாக்கியவோர்
சசமதி வேணிய னாரூர்ப் பிரான்பொலந் தாழ்வரைபோற்
புசமதி சென்றுறு பூங்கணை யாலுளம் புண்டதனுக்
கசமதி யாலிருந் தாளன்னை யென்னை யறைகுவதே. 63

முண்மூடு தீங்கனி நைந்திழி சாற்றின் முதிர்பயிர்பால்
விண்மூடு பூம்பொழி லாரூரர் வீதி விடங்கர்கங்கைப்
பெண்மூடு வேணியர் தோளுறு மாசை பெரிதுவரக்
கண்மூடி யீற்றிற்குக் காலமென் வந்தது காரிகையே. 64

திதலை திகழ்முலை மாமல ராடவஞ் செய்துமகிழ்
சிதலை யுறுசெம்பொற் புற்றிடங் கொண்டவர் தென்கமலை
மதலை யணிபவர் தம்புயத் தாசைக்கு மைதிலியின்
முதலை யழிப்பினி லாபமுண் டோசொல்லு முற்றிழையே. 65

முரசம் படகந் துடிமொந்தை தக்கை முழவஞ்சின்னம்
வரசங்கெக் காள மதிருங் கமலையில் வாழுமெங்க
ளரசன் மிலைதா ரரவன் செயுமயற் காகவிளம்
பிரச மிதனை யடன்மருந் தன்றுநம் பேதையரே. 66

மென்பந் தனமுலை மின்னார்கள் கானம் விசும்புறைவார்க்
கின்பந் தருதிரு வாரூரின் மேவு மிறைவர்வெற்பின்
னன்பன் றருதண் ணளியன்றி யன்னையிவ் வற்பசநந்
துன்பந் துடைக்க வறியா திதுவுண்மை சொல்லினனே. 67

பசன முறுவிடக் கெல்லாம் வனசரர் பாக்கியந்தன்
றசன முறவைத்த திக்கி யினியன தந்துரைசெய்
வசன மகிழ்திரு வாரூர்ப் பிரான்வரை வாயுறையிவ்
வசனங் கொழுநர் புயத்துறை வாழ்வை யளிப்பதின்றே. 68

பொய்மை தவிரன்பர் தம்மனத் தாமரை புக்கிருந்து
மெய்மை யருளுநம் மாரூர்த் தியாகர்தம் மென்புயத்தார்
செய்மைய லைத்தவிர்க்குந்திற லுள்ளது தெய்வவரைக்
கைமை யறுப்பதென் றிற்றை வரைக்குங்கொல் கண்டிலனே. 69

காரார் சுதைமிளிர் மாளிகை மாயவன் கண்வளரு
மேரார் தருதிருப் பாற்கடன் மானு மெழிற்கமலை
நீரார் சடைமுடி நித்தர்தந் தாரை நினைந்துநையப்
பாராமை வெட்டுமிப் பாதகங் கூறப் பயமெனக்கே. 70

கேளிக்கு நேர்மொழி யீதோ ரதிசயங் கேடருஞ்சூர்க்
காளிக்கு நாண்வர வாடு தியாகர் கமலையர்கோன்
றோளிற் குலாவுமென் றாரினை வேண்டினன் றுன்பமுற
வாளிற் றுருவை யழிக்கலுற் றாளன்னை வல்விரைந்தே. 71

சரியை யொருவுநம் மாரூரின் மேவிய சங்கரனார்
கிரியை யுறழ்புய போக மினிது கிடைப்பச்செய்யாள்
வரியை யுறுவிழி மைநாக மீதிங்கு வந்துகொன்னே
யரியை நினைந்தன ளன்னைதன் ஞான மழகியதே. 72

கறுத்தார் மிடறு வெளுத்தா ரடலையிற் கட்டழகாய்
பொறுத்தார் நதிமுடி யாரூரர் தாமகிழ் பூங்கயிலை
மறுத்தா னொழிமதி வானுத லாயன்னை வந்துதளை
யறுத்தா ளெனதன்பர் தோள்வரை யேறுத லாமினியே. 73

அனத்தைக் குறைக்க வறியாத் தடமட மார்ந்திலங்குந்
தனத்தைக் குறைக்க வறியாக் கமலைநஞ் சங்கரர்மேன்
மனத்தைக் குறைக்க வறியேன் பொருட்டிந்த மால்வரைவா
கனத்தைக் குறைத்தெரி காலா னடப்பவென் கற்பிப்பதே. 74

தகுதி யுறுமெய் யடியரை நாளும்பொற் றானத்தினோர்
தொகுதி யுறவைக்கு மாரூர்த் தியாகர்தந் தோள்வரைமேற்
புகுதினை யின்பொருட் டாட்டின ளென்னப் புகலுமுற்றின்
பகுதி யறுக்கும் விகுதியை யன்னையென் பற்றியதே. 75

சூடகக் கைமட மாதர்தம் பாடல் சுவர்க்கமென்னு
நாடகத் தார்க்கமு தேய்க்குங் கமலையென் னாதரின்பந்
தேடகத் தென்பொருட் டாகவன் னோ*(ர்)*வன்னை சீக்கிரத்திவ்
வாடகத் தீருண யான்களிப் பேனல னாமொழியே. 76

தோடவிழ் பூவு மிலாச்சமுந் தூவித் துடிமுழக்கி
நீடயில் வேளை நிறுத்தி முருக னினைவிருந்த
வாடர வக்கின் கிணிக்கால ரெங்க ளணிகமலை
நாடர கத்தை யுதவுமென் றெண்ணுத னன்றியன்றே. 77

மாவரை விற்கொடு மாற்றல ரூர்நன் மகிமையுள்ள
மூவரைக் காத்தெய்த வாரூர்ப் பிரானை முதல்வரைநந்
தேவரைக் காட்ட வறிகிலர் வீணிலித் தேயத்தெம
ராவரை யில்லா மறுமையைக் கொன்றிம்மை யாக்கினரே. 78

பாடி வருமெல் லளிக்கு முகஞ்செய் பதுமநன்று
கூடி யொளிர்பணை யாரூரர் தோட்செங் குவளையந்தார்
சூடி மகிழ வறியே னிமித்தமித் தொல்லுலகத்
தாடி வரையி லறுதியு றீவண்ண மாயினுக்கே. 79

குறித்துச் சுரும்புகள் கள்ளினை யுண்டு கொழுத்தெழுந்து
வெறித்துச் சுழல்பொழி லாரூரர் மேன்மன மேவிநிறை
தறித்துக் கொடியவிக் காமாக் கினியிரை தந்ததற்குக்,
கொறித்துக் குறிப்புமுற் றின்றாது மாய்ந்து குணமில்லையே. 80

கூடா ரரணெரி கூடக் குறுநகை கொண்டவெங்கோன்
றோடா ரிதழியன் னாரூர்ப் பிரான்வரைத் தோன்றல்வந்தென்
மாடா ரிலச்சையைக் கொள்ளைகொண் டேமயல் வைத்ததனுக்
காடானை யுற்றரி கண்டமென்னோ கொண்ட தம்மனையே. 81

ஏறுவந் தேறு மிறையோன் கமலை யெழினகர்ப்பா
னாறுவந் தேறு வளவய லூரனை நம்பியின்னுந்
தேறுவந் தேறுகி லாமதி யேன்முன்பு சீமையுறு
மீறுவந் தேறின் முதலைநல் லார்க ளியம்புவரே. 82

சிறையை மருவிய தீம்புன லூரனென் சிந்தையென்னு
மறையை மருவி யகலாத புன்க ணருளவெங்கள்
கறையை யுறுகண்ட ராரூரர் தேவர கண்டர்வரை
பறையை யறைந்தமர் பள்ளை யழிப்பதென் பாதகமே. 83

நெய்யக வேல்விழி நேரிழை யாய்தன்னை நேரிகந்த
தைய்யலை வாமந் தழீஇயவன் மன்னிய தண்கமலைச்
செய்யலை தேமலர்ச் சோலையெம் மூரர் சிறந்துதந்த
மைய்யலை மாய்ப்பவிம் மையலை யென்றன்னை வந்தனளே. 84

பொன்னை யிதழியும் வெள்ளியைத் திங்களும் புக்குதவ
மின்னை யுறுசடை யாரூரர் வீதி விடங்கர்பரிந்
தென்னை மயக்கி யிதையார விந்தத் திருந்தருள
வன்னை யடிமை யெனநின்ற பாவ மறிந்திலனே. 85

தூதா யொருதமிழ்ப் பாவலர்க் காகத் துணைமலர்ப்பூ
மாதாய் முடிமலர் செய்தோன் கமலையெம் வள்ளல்புய
மீதாய் மிளிர்மலர்த் தார்தர வேளினை வேண்டிநின்று
கோதாய் மடமை யறுப்பது கூறிற் குணமல்லவே. 86

சித்தச னங்கம் பொடியாய் விழவிழி செல்வர்மல
முத்த சனம்பணி யாரூ ரரைமதி முண்டகத்தில்
வைத்தச னந்துயின் மாற்றவெஞ் சூர்பகை மன்னுவிருப்
பத்த சனம்பக்கல் வந்துள தோநலம் பாவையரே. 87

நகத்தைக் கொடுமுன் னயன்சிரங் கொய்தரு ணம்பரன்ப
ரகத்தைப் பரிந்தநம் மண்ணல் கமலை யணிபொழில்வாய்
முகத்தை தருமலர்த் தீம்புன லூரர்த மொய்வரைத்தோட்
சுகத்தை துவாதசத் திற்குறு கண்வரத் தோன்றினனே. 88

புற்றி லமர்ந்தெழு புண்ணிய மூர்த்தி பொருவிறந்த
பெற்றி பிறங்கு கமலைப் பிரான்செய் பெருமயற்கு
வெற்றி யயிலற்கு மாமலர் சாத்திவன் மெய்பிரிந்த
கொற்றி யறுத்தென் குடத்திய ரார்த்தென் குணமுளதே. 89

உரம்பிரி யாதவ ருள்ளத்துண் மன்னிய வொண்கமலை
புரம்பிரி யாதவர் முன்னா ளூரித்தது போன்றெதிர்ந்த
கரம்பிரி யாவரை கொன்றுயி ரீந்தவக் காவலரைத்
தரம்பிரி யாதகர் மாண்டபின் னோசென்று சார்வதுவே. 90

பொன்றா ழிதழிய னாரூரின் மேவு புராதனன்பூங்
குன்றார் புயமுறக் கூட்டியென் னெஞ்சைக் கொடுத்தென்கையிற்
கன்றா தரத்திற் றருமென வோவரைக் கண்டகரைக்
கொன்றா தரத்துக் குரவை யயரக் குறிப்பதுவே. 91

ஊறலை மேவு மொருவ ரிருவ ருணர்வரிய
பாறலை மூவிலை வேலோர் கமலைப் பதியிறைவர்
சாறலைக் கொன்றையந் தாரரு ளாரெமர் சைலத்திங்கள்
கோறலை யாடிள மஞ்ஞா யுறவென் குறித்ததுவே. 92

நாகா பரணர்தென் னாரூரர் வாழ்வள நாடருக்குப்
பூகா டவிப்பொன்னி யன்றிற வாமற் புகுத்தெடுத்தீர்
மோகா னலத்திடை வீழ்த்தனன் றோவென்று முன்மொழிய
வேகா தசத்தை யறுக்கலுற் றாரெம ரென்செய்வதே. 93

செஞ்சாலி யோங்கு வளவய லூரனைச் சேர்ந்துதழீஇத்
துஞ்சா தலமரு தீவினை யேனுறு துன்பறியா
ளஞ்சாமை யீர முருகனைத் தேடின ளன்னையந்தோ
மஞ்சார் மிடற்றிறை யாரூர்ப் பிரான்றென் மருகலிலே. 94

கொடுங்கா லெழுவெண் வரையேழ் கடலொன்று கூடுமன்று
நடுங்கா தமரெழி லாரூர்த் தியாகரை நம்பியள
மொடுங்கா வுளமுள வூரன்செய் மால்வரை யுண்மையந்தோ
கெடுங்காலம் வந்த தெமர்கா ளிதுநன்று கேண்மின்களே. 95

எட்டாசை யாரயன் கைவளை யாதி யிறைவர்பயப்
பட்டோலை யிட்டைய கையடை யென்னப் படர்ந்தநஞ்சார்
மட்டோ ரிதழியெம் மாரூர்ப் பிரான்வரை மன்னர்மய
லுட்டோய் குறிப்பறி யாண்மைகொல் வானன்னை யுன்னினளே. 96

பாகார் மொழியவள் பாலர் குவளை படிந்துவண்டு
சீகா மரம்பயி லாரூர்த் தியாகர் சிலம்பர்தந்த
போகா மயலிது போமருந் தொன்று புரிந்துதந்து
நீகா தகரை நினையே லரிய நிரைவளையே. 97

மரையா ரிருதெய்வ மங்கையர் சென்னி மலர்ந்தபதப்
பரையா ரிடமகி ழாரூர்த் தியாகர் பரிகயிலை
வரையார் திருமயி லாடு துறையன்று வந்தருளித்
துரையா யெடுத்தவற் றாரா துதளைத் துணிப்பதென்னே 98

வாளன்ன கண்மட மானிட மேவிய வள்ளலன்பர்
கேளென்ன வந்தரு ளாரூர்த் தியாகர்பொற் கிண்கிணிப்பூந்
தாளென்ன நன்றலர் தாமரை யூரன் றனிமைதந்தான்
றோளன்ன தீறடச் சொல்லின ளன்னையென் சொல்லுவனே. 99

கற்றார் புகழ்தென் கமலைநந் தேவர கண்டார்புயப்
பொற்றா ருதவியென் புன்கணை நீக்கிப் புரத்தல்செய்யாள்
விற்றாழ் நுதலியிம் மேதினி மேற்பல் விரதஞ்செய்து
பெற்றாளென் பட்டிமை கொல்வா னினைத்தவிப் பெற்றிநன்றே.100

முண்டக வாவிக் கமலையர் கோன்றிணி மொய்ம்பருளாத்
தொண்டக மார்ப்பக் குறத்தியர் கூடித் துணங்கையிட
வண்டகங் கொண்ட கடம்பனை வாழ்த்தி மகிழ்ந்துகுள
குண்டகர் மாள நினைத்தா ளனையென வொண்ணுதலே. 101

விண்ணூ டியங்கெல்லை யைக்குரு டாக்கி மிளிர்திசையை
நண்ணூ வியஞ்செவி டாக்குங் கமலை நகருறைவான்
பண்ணூ றியமொழி பாலன் மயலெனப் பார்த்தொழியா
யெண்ணூ மை யைக்கொல்ல வெண்ணின ளாலன்னை யேந்திழையே. 102

நச்சை யுறுகணைக் குன்றவர் கோனிடு நல்லபுலாற்
கிச்சை புரிதிரு வாரூர்த் தியாக ரெழிற்குவளை
செச்சை நிறப்புயந் தாரார் திருந்தவத் தீமைவெல்லாக்
கொச்சை வயந்தரு மென்றுகொ லாய்மனங் கொண்டதுவே. 103

செம்மை மனத்தன்பர் சிந்தையுண் மன்னிய செல்வர்தம
தம்மை யிடம்வைத்த வாரூரர் மால்வரை யாரெமர்காள்
கொம்மை வரிமுலை வாயெம தூரனைக் கூட்டுமென்றே
யும்மை யிரக்கவிங் கெம்மை யழிக்கநன் றுன்னினிரே. 104

விச்சா தரர்பணி யாரூரர் வீதி விடங்கர்மென்பூங்
கச்சார் வனமுலை பாலர்பொற் பாத கமலமுன்னு
நச்சார் சுடரிலை வேல்வல னேந்துமென் னாதர்செய்த
பிச்சா டனமிங்கு வந்தென்ன செய்வது பேசுகவே. 105

தெவ்வரை வென்றவெண் மூரலி னான்மன்னு தென்கமலை
வெவ்வரை வில்லி மிளிர்சர ணாம்புய மேவுசிந்தைச்
செவ்வரை நாடன் றிருவருள் வேட்டவிச் செய்திக்கன்னை
யிவ்வரை வாய்மை யழிக்கலுற் றாளிதற் கென்செய்துமே. 106

வன்கண்ணி னர்க்கருள் செய்யார் பரவையென் வல்லிதன்கோன்
றன்க ணருளிய வாரூர்த் தியாகர் தடவரைவாய்
என்க ணுயிரிற் சிறந்தா ரருடர வெண்ணுகிலாப்
புன்கண் பிழைப்ப திமையழித் தோசொல்லும் பூவையரே. 107

கூடிச் சிறையளி பண்பயில் சோலையில் கூக்குயில்கள்
பாடித் திகழ்கம லாபுரி மேவு பரமனையே
நாடிச் சிறந்த மனத்தன்பர் பூம்புய நன்றருளா
ராடிச் சிலம்பழி காலமென் னோவந்த தாயிழையே. 108

ஏவா வரிகொளெம் மானைக் கமலை யிருந்தருளு
மாவா கனத்தனை நெஞ்சினிற் றாபன மாரச்செய்த
கோவாழ் தருசென்னி தானத் தெனைக்கொடு போய்விடுநீ
பாவாய் குறுமை யடச்சன்னி ரோதனம் பண்ணலின்றே. 109

தாயன் மிடறறு காலையில் வந்தரு டாயனைய
தூயன் கமலைநந் தொல்லோ னிணையடி சூடிமகிழ்
சீய மனையநம் மூரன் றிருவருள் செய்யலனென்
றாய மகமை யிறுதியி லாவண மாக்கியென்னே. 110

பாவாய் சுடர்மணிச் சிங்கா சனத்திற் பரிந்தமர்ந்த
தேவாதி தேவன்றென் னாரூர்ப் பிரான்மலர்ச் சேவடியை
யோவாமை யுள்ளி யகமிள கூரனுக் கோதறியா
யாவாமை கொல்ல வறிவா யிதுநன் றகலிடத்தே. 111

மென்றோ டவிழ்செங் கழுநீர்த் தெரியன் மிலைந்திருந்த
குன்றோ டுறழ்புயத் தாரூர்த் தியாகர் கொடுக்கவந்து
துன்றோ டியபசப் பெல்லா மொழிவதந் தோதகரைக்
கொன்றோ மடநடை மாமயில் போலுமென் கோகிலமே. 112

வந்திப் பவருக் கிரங்குங் கமலை வரதர்மென்றோட்
கந்தித் தலர்செங் கழுநீ ரினைமனங் காதலித்தாற்
பந்தித்து நின்றிம் மகிமையை யன்னை பதைப்பக்கொல்வான்
சிந்தித் தனளிக் கொடுமையுண் டோவிந்த தேயத்திலே. 113

ஞானா முதமுண் சிவப்பிர காசங்கொ ணற்றவர்தம்
பானாளுஞ் சித்திசெய் யாரூர்த் தியாகர் பணிவரையி
லானாமை நீயன்னை கோறலுற் றாயினி யம்புயப்பூந்
தேனாறு பாயும் வளவய லூரனைச் சேர்குவனே. 114

தும்மி னிருமிற் றுணையா யடியர்முன் றோன்றியருள்
வெம்மி னெனுஞ்சடை யாரூர்ப் பிரான்புய மென்குவளை
த்ம்மி னெனச்சொல்லித் தாழ்ந்திரந் தாலது சற்றுமுள்ளா
ரெம்மின் மையின்றுபுண் மைசெய்வ ராலெம ரென்செய்துமே. 115

மறைநான் கதிருங் கமலையின் மேவிய வள்ளலுட
னுறைநான் விரும்பவஞ் சேயெதிர்ப் பட்டமை யுன்னியரி
நறைநாண் மலர்சிந்தி மஞ்ஞையங் கேதன நாட்டியிங்கு
நிறைநாழி வைத்துக் கொறியடி யென்றன்னை நின்றனளே. 116

வனச மலார்முக மானார்க் கரசி மடமயிலே
யனசங் கிலிபுண ரானைதன் பாமகி ழண்ணலென்று
மனசங் கியப்பொரு ளாரூர்ப் பிரான்புய மாலைதராள்
பனசம் படவன்னை யென்னை கொலாநன்று பற்றியதே. 117

பூதி யணிமெய் யடியார்தந் நெஞ்சமி புண்டரிகத்
தாதி பணிதென் கமலையின் மேவிய வண்ணலந்தோட்
சாதி நிறைசெங் கழுநீ ரருளலர் தாய்பரியா
தோதி யிருந்தமை மாய்க்கலுற் றாளென்ன வோதுவதே. 118

அணிவ தரவ மயில்வது நஞ்ச மரையுடுக்கத்
துணிவ ததளெனக் கொண்டோன் கமலைநந் தோன்றறனைப்
பணிவ துளங்கொண்ட பண்பமர் நண்பர் பரிந்தவெப்பந்
தணிவதில் வெற்புக்கு ளூமை தடிந்துகொ றாழ்குழலே. 119

ஆசா பசாசைத் துரத்தடி யார்க்குமெய் யானந்தமாந்
தேசாதி பத்தியஞ் செய்வார் கமலைச் சிவன்புகழைக்
கூசா துரைக்குநம் மூரன்செய் மாலின் கொடுமை வெறாப்
பேசாமை வெட்ட நினைத்தா ளனையென்ன பேசுவதே. 120

மடியென வேங்கை யுரிகொள் கமலையர் வாழ்வையவ
னடியென நன்றலர் சிந்தையு ளாக்கிய வன்பர்செய்மா
லிடியென வள்ளிபின் சென்றுநின் றோன்மகிழ்ந் தேறுமுத
டடியென வன்னை விரைந்தா லொழியுங்கொ றாழ்குழலே. 121

காயனற் கையன் பரையா ரிடத்தன் கமலைப்பிரான்
சேயெதிர்ப் பட்டது பெண்ணெனப்பை சந்தியந் திப்பொழுதின்
வாயடுக் கன்மத்தி மையீர்வை பாற்கடல் வைகரிமான்
றூயநம் மூரனைத் தாரா யனையென்னை சொல்லுவனே. 122

குலையழி மீனுகள் பூம்புன லூரனைக் கூடலுன்னி
நிலையழி சிந்தையி னேற்காய்க் கமலையி னித்தர்தந்த
வலையழி வேல்வல னேந்தியைச் சாலவு மாதரித்துத்
தலையழி யாமை தலையழி யாமைசெய் தாழ்குழலே. 123

தாளா தரிதலை யாயார் தமக்கிந்தத் தாரணிவாய்
மாளாத செல்வ மருள்வார் கமலை வரதர்செம்பொற்
றோளாசை கொண்டலை தோகையர்க் காயெரி தூக்குவது
கேளாமை வெட்ட நினைத்தா ளனையென் கிளப்பதுவே. 124

சீறி வருபணி வேந்தன் றொழுதெழு தென்கமலை
யீறி லவன்புய மெண்ணிநைந் தேனிதற் கிவ்வரைவாய்க்
கூறி மடமயி னெட்டாதி நின்று குறுகியதோர்
மாறி யறுத்து முருகற் கிடவன்னை வந்தனளே. 125

வள்ளை பொருவிழி மாதர்தம் மாடன் மலிகமலைப்
பிள்ளை மதிய மணியுந் தியாகர் பெரிதென்னெஞ்சைக்
கொள்ளை கொளவன்னை கண்கள் சிவப்பறக் கொண்டுகொன்னே
வெள்ளை யறுப்ப விரைந்தனள் காணன்னை மெல்லியலே. 126

ஊனா ருயிரென வாரூரில் வாழு மொருவர்வரைப்
பானாடி வந்தென் னிறைகுறை யாமற் பறித்துக்கொண்டு
போனார் வரவிலைப் போர்ச்சூர் கடந்த புனிதனடத்
தானாமை வந்தெவ னாவது கூறுதி யம்மனையே. 127

கொங்கார் மலர்ப்பொழில் சூழ்தென் கமலையெங் கோன்புயத்தில்
வெங்காதல் கொண்டவென் முன்றுடி யார்க்க விரைமலர்தூய்ப்
பொங்கார் கலியிற் குறிஞ்சிப்பண் பாடிக் குரவையயர்ந்
திங்கா ட்டியென வந்தன ளாலன்னை யென்பவளே. 128

விதுவேற் றொளிர்சடை யாரூர்த் தியாகர்த மென்புயத்தில்
மதுவேற் றொளிர்செங் கழுநீர் கொடுவல்லை வந்துறுக
முதுவேற் றடக்கைச்செவ் வேளுக்குப் பூசை முறையினிடு
மதுவேற்று மையலை யல்வழி தேமல ரார்குழலே. 129

சூற்கார் கனகப்பொன் மாளிகைக் கந்தரஞ் சூழவிடப்
பாற்காவி யங்கணன் கந்தரம் போலும் பரிகமலை
மாற்காழி தந்தவர் திண்புயங் கூடன் மதித்துளநை
வேற்காடு வந்திங் கறுபட வேண்டுங்கொன் மெல்லியலே. 130

மறுவிலை யாறு பழனந் துருத்தி மகிழந்தவன்பா
னறுநுத லான்றிரு வாரூர்ப் பிரான்வரை நாட்டிலென்னை(ப்)
பெறுகுரங் காடு துறைவ னருண்மயல் போக்குமென்றோ
குறுநகை நீள்விழிக் கோதாய் விரைந்து கொணர்ந்ததுவே. 131

பேய்க்காலங் காட்டி னடன மினிதுசெய் பெற்றியன்செய்
வாய்க்கால் விளைதிரு வாரூர்ப் பிரானருண் மாலுணராள்
வேய்க்கா டுயர்பெரு வேலியஞ் சாரலெம் வெற்பிடையஞ்
சாய்க்கா டரியவெண் காட்டிலென் னாஞ்செய்வ தாயிழையே. 132

பாடலை நாளுஞ்செய் பாவலற் காகப் பரவைகொண்ட
வூடலை மாற்றிய வாரூர்த் தியாக ருறுபுயத்தைக்
கூடலை நாடின னெய்த்தான மன்னை குமரற்கன்பா
யாடலை யென்ன வறைகா ரணமென்ன வாயிழையே. 133

கறைக்கா லுரிசெய்த கையன்வெங் காலடு காலனறு
சிறைக்கா ரளிசெல் வழிபயில் பொங்கரந் தெண்கமலை
யிறைக்கா மனங்கண்டு கோடிக் கரைமல ரெய்யவுறு
மறைக்கா டனைவரு விக்கவந் தோவந் தறுபடுமே. 134

சவிரா சனையன்று தாள்கொடு தேய்த்துத் தரணிபல்லை
யவிரா மலர்க்கரத் தாலே யுகுத்ததோ ராண்மையர்பாற்
கவிரா ரிதழிய ராரூரர் வெற்பிற் கலந்தவவ்வைத்
தவிரா வடுதுறை வன்றார் தராது தடிவதன்றே. 135

கயல்வெல்லு முண்கண் ணியர்கான மல்கு கமலையர்கோன்
புயல்வென் மிடற்றிறை பொற்பதம் போற்று புனிதரெங்கள்
வயனெல்லிக் காவளர் பூம்புன னாடர் மகிழ்ந்துதந்த
மயல்கொள்ளிக் காடு வரவேண் டியதென்ன வஞ்சனையே. 136

திக்கா டரங்கிற் றிருப்புகழ்ப் பெண்ணடஞ் செய்யவியன்
மிக்கார் பணியுந்தென் னாரூர்த் திருநகர் மேவுபது
மக்கா டனையவர் வன்புய முன்னி மயல்கொள்ளுவோ
முக்காடு கொண்டுவந் தீரலுற் றாளன்னை மொய்குழலே. 137

குன்றடல் வில்லிற் கொளுவு மரிக்கணை கொண்டுபுர
மன்றடல் செய்தநம் மாரூர்த் தியாக ரகமகிழா
நன்றடன் மென்புய மீதாந் தொடைபுர நல்லிளமை
சென்றட லோவென வன்னைதன் பானின்று செப்புகவே. 138

மந்தி குதிப்ப வெருவி மலர்ப்பொழில் வண்டுவெள்ளைத்
தந்திக் கரடத் துறுதென் கமலையஞ் சங்கரன்செவ்
வந்தி நிறத்தன் வராவிளைப் பிற்குப்பா வாடையன்ன
வந்தி வணமக்கென் னாவது கூறு மதித்தினிதே. 139

வித்துரு மம்பொரு மேனியர் தாடொழு மெய்யடியார்
பொத்துரு மாய்ப்பவ ராரூரர் திண்ணம் புயத்துளத்தை
வைத்துரு வில்லவ னெய்கணை யான்மிக வாடினனஞ்
சத்துரு வைக்கொல்ல வுன்னின னன்றன்னை தாழ்குழலே. 140

ஓடை யுறுபைங் குவளையை நேர்விழி யொண்ணுதலா
யாடை மலர்வண்டக் கற்றா தகற்றுவ.தன்பர்கடம்
பீடை தவிர்த்துயர் பேரின்ப நல்கு பிரான்பெரிய,
மாடை மலைவளை யாரூர்த் தியாகர் மலைப்புயமே. 141

செற்றார் புரங்களைத் தீயிருந் துண்டுமுன் றேக்கிடச்செய்
குற்றால நாதர்தென் னாரூர்த் தியாகர் குவவுதிண்டோ
ணற்றார் பெறாதணி கைவளை சோர்ந்து நலியவிங்குச்
சிற்றாடை யோகிழி பட்டதென் செய்குவன் றேமொழியே. 142

ஒலிப்புறு வேலை யுதவு விடஞ்சுர ருய்யவுண்டு
கலிப்புறு கிண்கிணிக் காலர் கமலைக் கடவுடந்த
சொலிப்புறு காமவெந் தீயை யணைப்பது தோன்றுமென்மை
வலிப்புறு மோந்தைவந் தோவறி யேன்மதி வாணுதலே. 143

காரென நின்ற களத்தோன் கமலைக் கடவுளைப்போய்ச்
சேரென நின்ற மதியே முடலிற் செறிபசலை
பீரென நின்றமை கண்டன என்னை பெரிதெளிமை
யீரென நின்றன ளென்னைகொ லாமிங் கியம்புவதே. 144

பூங்கா வியங்கண் மலர்ந்து கமலமென் பூமுகஞ்செய்
பாங்கார் பழனத்தென் னாரூர்ப் பிரானைப் பரிந்துபுல்ல
லாங்காலம் வந்தில தங்கி கடாவி யமரர்க்கண்மை
போங்காலம் வந்ததென் செய்கோ வுரையுமின் பூவையரே. 145

சோர்ந்துடல் வாடங் கனையார் நிரீஇக்கணஞ் செய்துகொண்கர்
தேர்ந்துவிண் ணாற்றறல் கொண்டு புரோக்கணஞ் செய்துநல
மார்ந்து மகிழ்மா ளிகைத்தென் கமலை யரனத்தரா
யீர்ந்துசெந் தாடன மாநடை யாய்கொல்ல வெண்ணினையே. 146

தேங்க லுறுபுனல் வாவியம் போருகத் தேனுகர்ந்து
தூங்க லுறுமளி யாரூர்ப் பிரான்வரைத் தோடமுவா
தேங்க லெனச்செப்ப லுள்ளா ரிலரெழி லேந்திழையா
யோங்க லுறுதுள்ளன் மாய்ப்பா ருளரென்ன வோதுவதே. 147

சேலையுற் றேகரை யெல்லாங் கரையச் செறிபழனஞ்
சோலையுற் றேதிக ழாரூர்த் தியாகர்தந் தோண்மிலைந்த
மாலையுற் றேனிலை மாலையுற் றேனிந்த மால்வரையின்
பாலையுற் றேவெறி கொண்டா ளனையென்ன பாதகமே. 148

கூட்டுண் ணிலவு கிளிமுப் பொருளையுங் கூறவிண்ணி
னாட்டுள் ளவர்மகிழ் மாளிகை யோங்கிய நன்கமலைக்
கோட்டு விடையின் கொடியா ரருளைக் குறித்தனளென்
வீட்டுமை யைக்கொல்லு வானன்னை யெண்ணினள் மெல்லியலே. 149

மிச்சா திருட்டி யுடையேனுந் தம்மடி மேவவருள்
வைச்சார் கமலை விமலர் கயிலைநன் மால்வரைவா
யிச்சா கரக்கலை யெல்லாம் புகழென் னிறையருளா
னுச்சாக மாள நினைந்தா ளனையென்ன வோதுவதே. 150

புற்றி லெழுந்தவர் மூலமென் றூலப் புலிங்கமொத்த
பெற்றி யவரெங்க ளாரூர்ப் பிரான்புயம் பெட்டதற்கிந்
நற்றிண் வரையின் கிழவன் மகிழு நடுவெழுத்தில்
வெற்றி யழியத் தலையெழுத் தோசொல்லு மெல்லியலே. 151

இமையி லமரர் முனிவ ரசுர ரிராக்கதர்க
டமைவெவ் வளியுறு பூளைசெய் நஞ்சயில் சங்கரர்பா
லுமையி லொளிர்பவ ராரூர்த் தியாக ருறுவரையி
னமையிலென் னூரன் முகமதி தோன்றுங்கொ லாயிழையே. 152

கைமை யமரர் மகளி ருறாமற் கடுவருந்தி
மை யெனக்கள முற்றோன் கமலை வரன்வரைவாய்
மெய்மை தருமுரு கேசனைப் பூசை விழைந்துசெய்து
பொய்மை யறுப்பினென் னூரன்செய் மாலறப் போவதுவே. 153

நடுக்கை யுறுவரைக் கீழே யரக்க னலிந்தலற
வெடுக்கை யுறவிர லூன்றிய கோனெம் மெழிற்கமலைக்
கடுக்கை யணிபுயன் மார்பகம் புக்க கருத்தறியா
ளுடுக்கை யனைகொடு வந்தனள் காணென்ன வோதுவதே. 154

பாண்டவர் தந்துணை யானோ னயன்முதற் பண்ணவர்கூ
ழாண்டவர் மன்றிரு வாரூர்த் தியாக ரலர்கழுநீர்
பூண்ட புயங்கள் புரந்த புயமிது போகமுதல்
நீண்ட வடுவந்து நீளா ததுவுற நின்றதுவே. 155

சூலனஞ் சேவலொர் காரனஞ் சேரத் துனிசெயவோர்
வாலனந் தேற்று பணைசூழ் கமலை வளநகர்வாழ்
பாலனந் தந்தெனைப் பாலனஞ் செய்திலள் பார்வரையின்
மேலனஞ் சாகனின் றட்டிடு வாளன்னை மேவினளே. 156

மாரிகை நாக மெனுமதி யான்மக வான்மணியாற்
சீரிமை மாளிகை யாரூர்த் தியாகரைத் தேனிகர்சொ
லீரிமை யாதுகண் காணலுற் றேனெனை யீன்றவளா
மோரிமை வேல னொடுகொணர்ந் தாளென்ன வோதுவதே. 157

தசஞ்சிரங் கொண்ட கொடியனை வென்று தறுகண்மிக்க
துசந்திகழ் கையின ராரூர்த் தியாகர்பொற் றோணசையாற்
பசந்தவென் மேனியைப் பார்த்தன ணெஞ்சம் பதைத்தனளிவ்
வசம்புள்ளி மானனை யாய்கொல்ல வெண்ணின ளன்னைவந்தே. 158

நார மிருந்த முடியார் கமலையர் நாதர்தண்டே
னார மிருந்த புயவெற் புதவிய வாசையினாற்
பீர மிருந்தவென் மேனியைக் கண்டு பெரிதயிர்த்தாள்
வீர மிருந்தமை மாய்ப்பதற் கன்னை விரைந்தனளே. 159

யாமையை வேய்ந்தரு ளாரூர்த் தியாக ரெழிற்பவள
மாமையை: மேவிய மார்பக மீந்தவம் மாமயல்செய்
தீமையை யென்ன மொழிகுவன் யானிச் சிலம்பினிடை
சீமையை யன்னை யழிக்கவு மாயது தேமொழியே. 160

அடக்கமில் கந்தத் தவரறி யாதநம் மண்ணலென்று
முடக்கமின் னோன்பினன் சூழ்தென் கமலை முதல்வரைத்தாழ்
கடக்களி றன்னவர் தாரரு ளாரிக் கடிநகர்வாய்த்
துடக்கமி லோமையை யோவன்னை மாய்க்கத் துணிந்தனளே. 161

கன்றால் விளவெறி கண்ணன்கண் சாத்திக் கடிமலர்த்தா
ணன்றா தரிக்குந்தென் னாரூர்த் தியாகர் நயந்தணிந்த
மென்றா தவிழுஞ்செவ் வந்தியம் போதினை வேண்டவன்னை
குன்றாமை வெட்ட வெளிவந் தனளென்ன கூறுவனே. 162

உடுக்கானு மிக்கு வளர்தென் கமலை யொருவர்கங்கை
மடுக்கானும் வேணிய ராரூரர் மார்பின் மலைமலர்த்தார்
கொடுக்காண் மலர்க்கணை கொண்டெய்யு மாரன் றொடுப்பவந்த
நடுக்கா டழிக்க வகலுமென் றன்னையென் னாடியதே. 163

கற்றுச் செறிபொறி யோகியர் சூழுங் கமலைப்பிரான்
புற்றுப் பணியணி பொற்புய மீதுறு பூங்குவளை
யுற்றுக் கொடிய மயன்மது மாந்தி யுழிதரயா
னெற்றுக் களைவெறி கொண்டடு வானிங்ங னெண்ணுவதே. 164

பீண்மை நிகர்களப் பெம்மான் கமலைப் பிரானிடத்து
மாண்மை செலுத்து மனங்கன்வெவ் வாளியி னாற்கலங்கி
நாண்மை கரைய வழுகின் றனனிங்க னானதற்குக்
கேண்மை யழிய நினைந்தா யனையென் கிளப்பதுவே. 165

அறுகார் மலரிட் டடிதொழு வார்க ளமர்பெரிய
மறுகார் கமலைநம் வள்ளல்பைந் தாரை மகிழ்ந்துதரா
ளுறுகா ரளக மயிலனை யாய்நெடி தோங்குமுதல்
குறுகாய மன்னை கொலைசெய்கு வாளென்ன கூறுவதே. 166

நகத்தைக் கொடுமல ரோன்சிரங் கொய்தரு ணம்பன்வரைப்
பிகத்தை யிடம்வைத்த வாரூர்ப் பிரான்பொற் பெருவரைத்தோட்
சுகத்தை விரும்பி மதிமயல் வேற்கன்னை சொன்முதனீள்
சகத்தை யழித்து வருவதென் னோவுரை தாழ்குழலே. 167

அஞ்சை யடக்கிநல் லாறுசெய் கின்றமெய் யன்பர்கட
நெஞ்சை யிடங்கொ ணிமலர் கமலைநன் னித்தரைச்சேர்
மஞ்சை நினைந்து மதிமயல் வேற்கிந்த மால்வரைவாய்ச்
செஞ்சை யழித்துச்செவ் வேளுக் கிடவன்னை சேர்ந்தனளே. 168

பட்டாயெண் காட்டையுந் தற்றாரை யிந்தப் படிமுதலா
மெட்டா யிலங்குங் கமலைத் தியாகரை யெய்துவதற்
கொட்டாய் முருகனுக் கொண்மலர் தூவிவல் லொற்றிகந்த
கிட்டா யழிப்பக் கிளிமொழி நீயென்னை கிட்டியதே. 169

காள மிடறுமுக் கண்ணுமெண் டோளுமுன் காட்டியென்னை
யாள வருமெங்க ளாரூர்ப் பிரான்றரு மாசைக்கந்தோ
தாள முலைமென் றுடியிடை யாயிங்கு தாமசமே
மாள வருமிந்த மாபாவங் காண வருகின்றதே. 170

சீர்க்காவி யங்களத் தாரூரர் கண்ணுந் திறக்கவெய்த
போர்க்காமன் வெங்கணை யாலே யுடலம் புழுங்கியுற்ற
பீர்க்கான தன்மை கடப்பையி றந்திப் பெருவரைவா
யார்க்காடு வந்து பலியுறு மோவுரை யாயிழையே. 171

ஆங்கார மின்றி யறிவா னமைந்தமெய் யன்பினர்க
டாங்காதல் செய்யுந்தென் னாரூர்த் தியாகர் தடவரைத்தோட்
பாங்கா வெனைநன் றியைப்பா ரிலரிப் பருவரைவாய்
நீங்காமை மாய நினைப்பா ருளர்நன்று நேரிழையே. 172

நச்சை யருந்திவிண் ணாட்டார் மணந்தமர் நன்மகளி
ரிச்சை யுறுமங் கலநாண் களத்தி லிருப்பவைத்தார்
செச்சை நிறத்தெங்க ளாரூர்ப் பிரானெனச் செப்பவதிற்
கொச்சை பிடித்தட வெண்ணின ளன்னையென் கூறுவதே. 173

பண்ணைப் பயிலளிப் பூங்கணை யாலந்தப் பாவியெய்த
புண்ணைத் தவிர்ப்பது கொல்லோவெ னன்னை பொருப்பரசன்
பெண்ணைப் புணர்ந்ததென் னாரூர்த் தியாகர் பிறங்குறுதற்
கண்ணைச் சுமக்குஞ் சுமையை யறுப்பக் கருதினையே. 174

பைய்யா ரரவரை யாரூரர் தம்மைப் பரிந்துதழீஇ
மெய்யான நித்திரை செய்யா தலமரு வேன்பொருட்டாய்
வைய்யா ரயில்விழி வள்ளிதன் கோனை மகிழ்ந்துசுமந்
தெய்யாமை யீர நினைந்தா ளனையென் னியம்புவதே. 175

தெரிந்தார் தமக்குந் தெரியார்வெங் காரியிற் றேகவொளி
பிரிந்தா ரரிபணி யாரூர்த் தியாகர் பெருவரைத்தோள்
பரிந்தா ரலர்வெம் பகழியி னோடு பகைபகைமை
யரிந்தா லொழிவதெவ் வாறுகொ லோவுரை யாரணங்கே. 176

வெவ்வா ரணமுரி கையர் கமலை விமலமலர்ச்
செவ்வா ளனபுய மால்வரை யீந்த செழுமயலுக்
கவ்வாய்செவ் வேளை யகமகிழ்ந் தேசுமந் தாதரிக்கு
மிவ்வாடை யோபிணை பட்டது போலு மியம்புகவே. 177

பங்கே ருகமலர்ப் பாயன் மரீஇநன்று பள்ளிகொள்ளுஞ்
சங்கே தரளஞ் சொரிசீ நகரெந் தலைவர்தம்பா
லங்கே மனஞ்செல வாகம் பசந்தன ளன்னைகொனே
யிங்கே யிருமை யறேலித னாலொன்று மெய்தலின்றே. 178

கோதாட்டி னீங்கு குடிசூழ் கமலையெங் கோனரவ
மீதாட்டை மேவிய மேலோ னகத்தினன் மென்கழுநீர்
தாதாட் டுணையினை நம்பினன் யானினி தாயவட்போ
காதாட்டை நீவிடல் காரிய மாகுங் கழறினனே. 179

வெள்ளாறை யாறு பழனந் துருத்தி விருத்தகிரி
நள்ளா றிவைமகி ழாரூர்த் தியாகர் நயந்தணிந்த
கள்ளார் தருசெங் கழுநீர்த் தொடையலென் கைகொடுக்க
வுள்ளா துதளை விடுதிகண் டாய்மதி யொண்ணுதலே. 180

அம்மை யரித லழகுகொ றொன்மை யமரர்பிரான்
மும்மை மதப்பொழி தோலுரித் தோன்விண் முதுவிருந்து
செம்மை தருபுலத் தார்சூழ் கமலைச் சிவன்புயத்திற்
கொம்மை வனமுலை யின்னியை பன்றிவண் கோலிழையே. 181

இடிக்கா ரியமதி ராரூர்ப் பெருநக ரேர்பெறவாழ்
கடிக்காவி யங்களத் தார்கம்பிக் காதர்செய் காதலிந்தப்
படிக்கார் பசலையுண் டாக்கியென் மேனியிற் பற்றுநலங்
குடிக்கா டழிக்க நினையனை யேயென்ன கூறுவதே. 182

ஓத கரத்தி னுறைவா னெவற்றினு மொண்கமலைச்
சீத கரன்றிகழ் சென்னியன் றந்த செழுமயற்குப்
போதகர் சூழு முருகனைத் தாங்குபு போதகரைச்
சாதக ராக நினைந்தா யனையென்ன சாற்றுவதே. 183

இருமை வகைதெரிந் தீண்டற மேவு மியல்பினர்த
மொருமை மனத்துந்தென் னாரூ ரினுநன் றுறைபெருமான்
கருமை மிடற்றெங்கள் கண்ணுத லோடு கலந்திருக்கும்
பெருமை யுறலிச் சிறுமைகொன் றோவன்னை பேசுகவே. 184

வண்டமர் பூம்பொய்கை யாரூர்த் தியாகர் மணிவரைத்தோட்
கொண்டவெவ் வாசையி னென்பொருட் டாக குவலயத்திற்
கண்டசராயுச மாதிய மூன்றுங் கவின்றிருக்க
வண்டச மோபிணை பட்டது மாளச்சொல் லாய்சிறிதே. 185

சூதுக்கு நேர்முலை யாளப் பரவைதன் றோன்றலுக்காத்
தூதுக் கியன்றரு ளாரூரர் சங்கதி தோன்றலின்றி
மாதுக்க மேவினன் பாவினன் யானன்னை மால்வரைவா
யேதுக்க சங்கதி சேர்வதந் தோநன் றியம்புகவே. 186

பன்மை யுறுமுயிர்க் காருயி ராகிப் பரிந்தமர்ந்த
தன்மை யுறுமெங்க ளாரூர்த் தியாகர் தமதுபொற்றோண்
மன்மைய லின்மிக வாடின தற்கிவ் வரைக்குளகு
தின்மை யறுப்பதி னன்மையுண் டோவன்னை செப்புகவே. 187

ஒட்டார் புரங்களை யொண்ணுதற் கண்ணழ லுண்டுவப்ப
விட்டா ரெழில்வள ராரூர்த் தியாகரை மேவுகிலேன்
மட்டார் கடம்பணி வேள்பூசை செய்து மகிழவொருப்
பட்டாடை யோகிழி பட்டதென் னன்னையிப் பாரிடத்தே. 188

கிழமை யுறுமெய் யடியா ரெவர்களுங் கேடிலன்பாற்
றொழமை விழியு டனாரூ ருறையிறை தோளினியா
னழமை தவழ்வரைத் தெய்வம் பராவியிங் கன்னையந்தோ
பழமை யிறுதி யரியும் புதுமையென் பன்னுவதே. 189

நாட்டா ரறியமுன் னாட்கொண்ட சுந்தரர் நன்றுரைத்த
பாட்டா சையினர்நம் மாரூர்த் தியாகர் பருவரைத்தோட்
டோட்டா னிறைந்தொளிர் செங்கழு நீர்மென் றொடையையன்னை
காட்டாளிப் பூவின் வெறிகொணர்ந் தென்னைகொல் காட்டுவதே. 190

ஓராமை யானவ னெட்டாமை யோங்கிய வுத்தமர்சீர்
தீராமை மன்னிய வாரூர்த் தியாகர் திருவருட்கண்
பாராமை யான்மத னஞ்சாமை யெய்யும் பகழியென்னை
யீராமை வாழ்கிலன் மூவாமை மாள விருந்தனனே. 191

வரிய சிறையளி தீண்டி யிதழ்க்கலை வல்லைநன்றா
யுரிய மலர்ப்பொழி லாரூரர் மார்பி லுறுகழுநீர்
புரிய முருகனைப் பூசனை செய்து பொலமைகொணர்ந்
தரிய நினைவுநம் மன்னைக்கு வந்த தறிகிலனே. 192

ஆத்தி யவிர்சடை யாரூர்ப் பிரானை யணைவதின்றிக்
காத்திர மெய்த்தய ரென்பொருட் டாகவிக் கந்தர்முன்சென்
றேத்தி யிறைஞ்சி யிசையளி தாழ்நல் லெழின்மலர்கள்
சாத்தி யுடம்பழி கொற்றி யரித்துற விர்விடவே. 193

சீறுறு மைந்தலை யாரி விழியனல் சிந்தியலர்
மாறுறு வெய்தச்சன் மாய்த்தான் கமலையெம் மானருளா
வீறுறு காந்தண் மலைந்தான் மருங்கொல்லன் மேன்மையன்னை
யீறுற நீவெட்டி யானென் பெறுகுவ திக்களத்தே. 194

சாரங்கி வீணை தழங்குங் கமலையர் தாருளியெந்
நேரங் கிலேச மிகுந்தூ ணுறக்க மிரண்டுமின்றிப்
பீரங்கி யான வெனக்கொடு வந்திங்குப் பெற்றவளிக்
காரங்கி தாங்கி கிழித்தென்ன கோட்டை கட்டுவதே. 195

நரியரி செய்து நடத்திய சேவகர் நல்விருத்த
கிரியரி யெங்கடென் னாரூர்த் தியாகர் கிளர்நறுந்தோள்
பரியரி தாழ்தொடை தாவென வீன்ற பசுமையென்னே
யரியரி யென்று முருகன்முன் னோதுமிவ் வற்புதமே. 196

ஆற்றைச் சடையி லடக்கிக் குளக்க ணனல்புரிந்து
கூற்றைப் பதத்துவைத் தானைக் கமலையிற் கூடலின்றிச்
சாற்றைக்கு மாரற் கியற்ற வருமித் தனிமையித
னீற்றைக் குறைக்க நினைந்தா யனையென் னியம்புவதே. 197

எற்றைக்குஞ் செல்வ மிகவாக் கமலை யிருந்திரண்டாம்
பற்றைத் தவிர்ந்தவர்க் கின்பருள் வானைப் பரிந்திவ்வங்கம்
வற்றைச் செறிந்துடை சோரநின் றேற்கன்னை வளளனெற்றி
யொற்றைக்கண் டாங்கி கொணர்ந்தாள் கிழிக்கவென் னோதுவதே. 198

ஆடம் பரந்தொடி தந்திப் பசலை யகற்றுங்கொல்லோ
தோடம் பெருகு மிதனை விடுதி துணியலன்னாய்
வீடம் பரங்கொண்ட மால்சூழ் கமலை விமலர்பொற்றோட்
கூடம் புகுகுஞ் சரமெனக் கொங்கையைக் கூட்டுதியே. 199

சாமம் பகலன்பர் பேதமெண் ணாதுறத் தாழ்ந்தவிச்சை
நாமந் தவிருந்தென் னாரூர்த் தியாகர் நயந்தபுயத்
தாமங் கொணர்ந்திலை தானஞ்செய் தாயிலை சார்திறமை
வாமந் தருகுன்றிற் றண்டிக்க வன்னையென் வந்தனையே. 200

உற்பல வோடை யுடுக்குங் கமலை யுறைபவனைச்
சிற்பர னைத்தெய்வ சிங்கா தனத்தனைச் சிந்தைவைத்துப்
பற்பல வெண்ணுவன் யான்வன்னி தன்னைப் பரித்துலவு
மற்பசந் தோட முறவலைப் பாயன்னை யாசிதுவே. 201

மருகன் மகிழுமெம் மாரூரர் மார்ப மருவியின்பம்
பருக லொழிந்துள பைந்தொடி சோர்ந்து பசந்தவட்குப்
பெருகு தவத்துயி ரேடிமை சென்று பிடித்தரிந்து
முருகு புரிந்து முருகனை வாழ்த்தின் முறையல்லவே. 202

தொடுக்கின்ற செங்கழு நீர்மென் றொடையணி தோளரன்பா
லடுக்கின் றவர்க்கரு ளாரூரர் மாலென் னழகையெல்லாங்
கெடுக்கின் றதற்கெஞ்செல் வேண்முன்னில் லாது கிளர்முதுகு
கொடுக்கின் றதனைக் கொலைசெய்வ தன்னை குணமல்லவே. 203

கண்டக் கறையின ராரூரெந் தேவர கண்டர்மிலை
துண்டப் பிறையின ராசையி னாலுடை சோர்ந்திருகை
வண்டப் புறஞ்செல வாடுவ தற்கன்னை மாதிடத்தான்
முண்டக்கண் டாங்கி கொணர்ந்தா யிதுநன் முறைமையன்றே. 204

பாடக மெல்லடிப் பார்ப்பதி கண்டு பரியமன்று
ணாடக மாடெங்க ளாரூர்த் தியாகரென் னன்மனத்தைப்
பேடக மாக்கிமின் மேகலை போக்கிப் பிறங்கிருகைச்
சூடக நீக்கவிவ் வாடீர வன்னை துணிந்தனளே. 205

மலைக்கார் முகத்தினன் வார்கடல் வண்ணவெவ் வாளியின
னலைக்கா லளகத்தென் னாரூரன் பாலென் னகம்விரைந்து
சிலைக்காமன் வந்துசெய் தீங்கொருங் கோதிடச் செல்வனன்னை
தலைக்கா டழித்துமுன் சேறுசெய் வாயிது தக்கதன்றே. 206

பாகாம் பனிமொழி பாலர் கமலைப் பதியரிந்த
மோகாம் புதியுய்த்துப் பீர்க்குறு பூவண மூட்டியிப்போ
தேகாம் பரத்தொடு காஞ்சியு நீக்கின ரென்செய்வல்கூ
கூகாம் புயர்வரை வாய்மதி யின்மையென் கொண்டதுவே. 207

பற்றனைத் துந்தவிர் பண்பினர் நாளும் பரிந்துவலஞ்
சுற்ற வளந்திக ழாரூரின் வாழுமென் றோன்றலுக்குப்
பொற்றவி சொன்றவென் புந்திசெய் தேனன்னை பூம்பொருப்பி
லுற்றசங் கத்தை யுறாதலை பாவமை யோகொடிதே. 208

கொந்தார் மலர்ப்பொங்கர்க் கொம்பரின் மந்தி குதிப்பவண்டு
மந்தார மென்மலர் வாய்வீழ் கமலையெம் வள்ளலரு
டந்தா தரிக்க விலாது வெறித்துறு தாதுநட்டம்
வந்தா லதுகுண மன்றுசொன் னேனன்னை வாய்திறந்தே. 209

அக்கார மாரமு தாருயி ரென்றுமெய் யன்பரெல்லா
மெக்கால மும்புக ழாரூர்ப் பிரானோ டியைந்துநலந்
துய்க்கா தலமந் துறுதுயர் கொண்டயர் தொல்வினையே
னிக்காமக் காடழி வானாலென் னன்னை யெளியதன்றே. 210

ஒளிவந்த மூவிலை வேற்படை யாளியை யுற்றதவத்
தளிவந்த சிந்தையர் சூழ்தென் கமலை யரனையெண்ணித்
துளிவந்த கண்ணின ளானே னுடைமை துணிப்பனென்று
வெளிவந் தனையிது நன்றுகொ லன்னை விளம்புகவே. 211

பைக்கா லிலியு மதியும் பொதியும் படர்சடையெம்
மைக்காவி யங்களத் தாரூரர்ப் புல்லி மகிழ்ந்துநலந்
துய்க்கா தலமரச் சூழிப் பசலை துவன்றிநின்ற
மெய்க்காடு வந்தது துட்டியெங் கன்னை விளம்புகவே. 212

சோக்கா ருரிஞ்சு புகலிமன் னாவின்மன் சுந்தரர்தந்
தூக்கா ரமுதந் தொலையாக் கமலைநந் தோன்றலணி
தேக்கா றருசெங் கழுநீர்த் தொடையலிச் சிக்குமிந்தச்
சாக்கா டுறுத றகாதன்னை சொன்னது சத்தியமே. 213

தங்க நகவன் றனுக்கொடு முப்புரந் தாக்கிநின்ற
திங்கண் முடியின ராரூரர் சேவடி சென்னிநிறீஇத்
துங்க வரைநிகர் யானை கடிந்து துலைத்தநர
சிங்கம் விழையச் சரப மனையென்ன சென்றதுவே. 214

பிச்சை புகுந்துறு மாதவர் மேவிய பெண்டிர்க்கெல்லா
மிச்சை யருளிய வாரூ ரரைத்தனித் தின்பமுறக்
கச்சை யறவெழு கொங்கைக ளாரக் கலப்பதற்குச்
சச்சை யடைவிப்ப தென்னைகொ லோவன்னை சாற்றுகவே. 215

செந்நெல் கரும்பைச் செயிக்குங் கமலைத் தியாகரென்று
சொன்ன வுடன்வெறி யாட்டாளற் றேடிநஞ் சேய்க்கலர்தூய்ப்
பன்ன மிடியிற் பரப்பிக் குறிஞ்சியைப் பாடிவிடா
தென்னசங் கேதஞ் செயநினைந் தாளன்னை யென்பவளே. 216

மெய்தரு் நாவின ரன்பரென் சிந்தை விரும்பிநின்று
கைதவஞ் செய்து வளைகொண் டுடையைக் கவர்ந்துகொள்ளைப்
பொய்தவிர்ந் தார்புக ழாரூரர் வேளைப் பொடிப்பொடியாய்ச்
செய்தகண் டாங்கி கொடுவந்த தென்னன்னை செப்புகவே. 217

தக்கன் முடியினை யீர்ந்தவி யுண்டு தருக்கவந்த
மிக்க வமரர் குழுவெயின் மஞ்சள் வியப்பச்செய்த
செக்கர் நிறத்தெங்க ளாரூரர் புல்லிய சிந்தைக்குமா
துக்கசஞ் சார நினைப்பதென் னோவன்னை சொல்லுகவே. 218

மாயவ னார்விழிப் பாதர் கமலை வரதர்தம்பாற்
போயவென் னெஞ்சம் வராமையி னீண்டு புலம்புகின்றேன்
சேயகஞ் சென்று நறும்புகை யேந்திச் செழுமலர்க
டூயச மீர நினைக்கின்ற தென்னன்னை சொல்லுவையே. 219

மூரி விடையின் வெரின்சென் றடியர்கண் மூழ்குபவ
வாரி தவிர்த்தரு ளாரூரர் தோளின் மலைந்திலங்கு
பூரி யிதழியி னாசைகொ ணெஞ்சைப் பொருப்பிற்றலை
யாரிவ் வசமன்னை யாக்கா தழித்த வழகியதே. 220

கள்ளை யுறுமலர்ச் சோலை யுடுத்த கமலையின்வா
யெள்ளை யுறுநெய் யெனவே யுறையு மிறையென்னெஞ்சைக்
கொள்ளை கொளநின் றயர்வது கண்டிலை குன்றிலன்னை
வெள்ளை யடிக்கவுஞ் சித்திரஞ் செய்யவு மேவினையே. 221

மட்டலர் பூம்பொய்கை யூரனென் னெஞ்சின் மதித்திருந்து
புட்டகங் கொண்டு புலம்பச்செய் தானிப் பொருப்பிடத்திற்
சிட்டர்கள் போற்றுதென் னாரூரர் வேளைத் திரணமுறச்
சுட்டகண் டாங்கி கொடுவரு மன்னையென் சொல்லுவதே. 222

கந்தர்சம் பந்தரோர் தந்தர்தண் டீசரெங் கௌத்தியென்னு
மைந்த ருறுபவ ராரூர்ப் பிரானென் மதிமயக்கி
யிந்த விரகவெங் கோடையின் வாயென்னை யீர்த்துவிட
வந்தசங் கொல்ல வருவதென் னம்மனை வையகத்தே. 223

மாக்காவின் மந்தி கடுவனோ டூடி வளர்தருப்பாய்
தூக்காவி வாவிநம் மாரூர்த் தியாகர்தந் தோள்களுற
நீக்காது புல்ல நினைந்தது கண்முக நெஞ்சினெழ
நோக்கா டனையுய்த் தரியலுற் றாயென் னுவலுகவே. 224

சோடச நல்லுப சாரங்கொள் வோர்வளர் தொல்கமலை
நாட ரசபை நடனர் திருவரு ணன்றுதரார்
வேடச பத்திரி யாதியெய் வேதையில் வெய்யமட
மூடசம் போக நினைப்பதென் னன்னை மொழிகுவையே. 225

சங்கையுற் றோங்குசெய் யாரூர்த் தியாகர்தந் தாரையுன்னி
சங்கையுற் றேனிலை யாடையுற் றேனிலை தாயென்கொலாஞ்
சங்கையுற் றேனென நீயுற்று நோக்கித் தரணிதந்த
சங்கையுற் றேவெறி யாட்டாளற் றேடுதி சாடுதற்கே. 226

ஆர வெறிகம ழூரூர்த் தியாகர்வெவ் வாசையென்னும்
பார வெறிகொண் டலைகுவன் யானப் பரவையிற்செல்
சூர வெறிமலர் மாத்தடிந் தோனுறு சூழலின்வாய்
வீர வெறிகொண் டடவரு வாயன்னை வீணிதுவே. 227

கொம்பிர சந்தனை யாரூரெம் முக்கட் கொழுங்கரும்பை
நம்பிர சந்துய்க்க மாட்டேனை மார னடுங்கவிந்த
வெம்பிர சஞ்சுழல் பூங்கணை யெய்து வெகுளவந்த
சம்பிர மந்தெளி விப்பதுண் டோவன்னை சற்றுரையே. 228

பஞ்சாங்க மெட்டங்க மாகும் படிபணி பாக்கியருக்
கெஞ்சாத செல்வ முதவுங் கமலை யிறையைப்புல்லித்
துஞ்சா துகிடைகொ டீவினை யேற்கிந்தச் சூழல்வந்த
சஞ்சார மாவது முண்டுகொ லோவன்னை சாற்றுகவே. 229

சித்துச் சடமென் றிரண்டினு மேவியுந் தீர்ந்துநின்ற
வத்துக் கமலைநன் மாநகர் மன்னிய வாழ்வுதந்த
பித்துக் ககத்துறை தெய்வத்தை யன்னை பெரிதுவந்த
சத்துக் கழிவு நினைப்பது சாலவுந் தக்கதன்றே. 230

தாதித் திமியெனு மோசை தவாது தழங்குகின்ற
வீதிச் சிவனக ராரூர்த் தியாகர் விழைந்தணிந்த
சாதிச் செழுஞ்செங் கழுநீ ருறுதொடை தந்தவிந்த
வாதிக் குரிமையி னந்தம்வந் தம்மனை யாவதென்னே. 231

கடிகமழ் பூம்பொழி லாரூர்த் தியாகரைக் கையிற்றரா
யிடியுறழ் சத்தியன் கோயிலை யன்னை யிணைக்குறளிப்
படிபுகழ் நேரிசை நன்னில மண்டிலம் பற்றச்செய்யா
யடிமறி மண்டில மாக்குவை சால வழகியதே. 232

அம்போ தகவதட் போர்வையு முக்கணு மம்புலியுஞ்
செம்போ தகத்திரு முன்காட் டியவருட் செல்வரெழிற்
கும்போ தயர்தொழு மாரூரர் தந்த கொடுமயற்க
சம்போ தனங்கொடு செட்டிமுன் வந்ததென் றாயுரையே. 233

காயா மலர்நிறக் கண்ணன்கண் டாளிட்டுக் கைகுவியா
வீயாய் வளையென் றிரக்க வருளெம் மிறைகமலைச்
சேயா யுடனுறை செல்வர்கொள் வேதனை செப்பியென்றா
யாயாடு வண்டம் பரந்தரு மோதண் ணளிபுரிந்தே. 234

வண்டா ரலர்பொழி லாரூரின் மேவும் வரதர்புயத்
தண்டார் கொணர்ந்திலை தந்தா யலைதடச் சைலமொன்றும்
விண்டார் கலியுண்ட வேலோன் றிருவடி வீழ்ந்துமனங்
கொண்டா டலையுன்னி யன்னையென் னிங்குக் குறுகியதே. 235

வம்பட வோங்கு வனமுலை யாளுறு வாமமுள்ளோன்
வெம்பட மாரர வார்த்தோன் கமலையர் வேந்தன்வந்து
செம்பட நீக்கியென் சிந்தைநின் றோனெனச் செப்பவுற்ற
சம்பட மால்வரை வாய்கிழிப் பானன்னை சார்ந்தனளே. 236

வெம்பா தகமொழி மெய்யர்க்கு மெய்யன் மிளிருமொற்றைக்
கொம்பார் களிற்றின னாரூர்ப் பிரான்செங் குவவுத்திண்டோ
ணம்பா வுறுபெரு மோனமுற் றேனென நாகத்துற்ற
சம்பா டணஞ்செய் கிலளடு வானன்னை சார்ந்தனளே. 237

அஞ்சீவம் வெள்ளி சனிபானு வம்புலி யாரல்புதன்
வெஞ்சீ ரரவ மிவைதாழ் கமலை விமலர்செய்மா
னெஞ்சீர வாவி யவணிவ ணாக நிலவவுற்ற
சஞ்சீவி யாவகை யென்னன்னை செய்தியிச் சாரலிலே. 238

நிலையாத் திருநசை நீக்கித் தனதரு ணேசமுற்றோர்க்
கலையாச் சிவானந்த நல்குங் கமலை யரனருளிற்
றொலையாப் பெருமயல் கொண்டேன் முன்னென்று சொலச்சொலவித்
தலையாட் டினையன்னை கொண்டுநின் றாளென்னை சாற்றுவதே. 239

நீராட் டினையுற்றுப் பூசைசெய் வோர்க்கு நெடுவிசும்பின்
சீராட் டினைநல்கு மாரூரர் தந்த செழுமயலின்
போராட் டினின்மிக நோயுழந் தேனென்று போற்றவிந்தப்
பாராட் டினையுற்று நிற்கின் றனையன்னை பாவமிதே. 240

★ இடையில் 57 பாடல்களில்லை ★

விண்ணாட்டின் மேலெழிற் பாதலத் தப்புறம் வேலைசுற்றி
நண்ணாட்டின் மன்னித்தென் னாரூரின் வாழிறை நற்புயநெஞ்
சுண்ணாட்டின் மால்கொள வோங்கலந் தெய்வத மூரனன்று
மண்ணாட் டினையட வந்துநின் றாயன்னை வானுதலே. 298

அமையை நிகர்பசுந் தோட்கருங் கூந்த லவிர்கயற்க
ணுமையை யிடம்வைத்த வாரூர ரேதத் தொருமுதல்வர்
தமைநல் விழிகொடு காணாது வாடிய தையலருக்
கிமையை யறுக்க நினைப்பது நன்றுகொ லேந்திழையே. 299

கருமை மிடற்றர ராரூரிற் றேவர கண்டர்தம்மை
யொருமை மனத்துட னுள்ளுகின் றேனிந்த வுண்மையெண்ணா
யுருமை யுறழயில் வேலோனைப் பூசித் துளமெலிய
விருமை யலைய லெழிலார் மலர்க்குழ லேந்திழையே. 300

வாமக் குலிகச்செந் தாமரைக் குண்டமன் மாமறையோ
ரோமச் செழுஞ்சுடர்க் குண்டங்க ளொப்ப வொளிர்கமலைத்
தாமப் புயத்தரைத் தந்திலை யன்னையச் சங்கரனார்
வாமத் தவள்பெய ரீறற நீநன்று வந்தனையே. 301

ஆசா பசாச மணுகா தவரகத் தன்பொடுசெய்
பூசா பலமெங்க ளாரூ ருளார்தனம் புந்திவைத்துப்
பேசா திருக்குமிப் பேதையர்க் காகப் பிறங்கனலூர்
தேசா டனமிங்கு வந்தெவ னாவது செப்புகவே. 302

முரச முகில்போன் முழங்குங் கமலைநம் முன்னவனென்
னரசம் புலிமுடி யண்ணறன் றோளி னலங்குகின்ற
பிரச விதழி நறுந்தார் கொணர்கிலர் பேசருவஞ்
சரச மழிய நினைவீ ரிதுவென்கொல் தையலரே. 303

நகத்தை வளைத்துறு முப்புர மெய்தவென் னாதரகச்
சுகத்தை யிடம்வைத்த வாரூர்த் தியாகர்தந் தோளிணையென்
னகத்தைக் கவர்ந்துறு வேதைசெய் தால்வெவ் வழல்சுமந்த
சகத்தை யலைத்திட வேண்டுங் கொலோவன்னை சாற்றுகவே. 304

வீக்கா வருகு மிளிர்தென் கமலை விமலரெங்க
ளாய்க்கா ரிடந்தந்த வற்புதர் மேல்வள ராசையந்தோ
பூக்கார் முகத்துவெவ் வேளினை யேவிப் பொருவில்புன்னை
யீக்காடு வந்தெவ னாவது கூறுதி யேந்திழையே. 305

கலைக்கான் மலர்கொடு காரிகை யாகச்செய் கார்முகிலின்
றலைக்கா மணியெங்க ளாரூரர் தோண்மலை தாரருளாய்
சிலைக்காமன் வெய்ய சிலீமுகங் கொண்டு செயிர்த்தெழுந்து
மலைக்காடு நீகொணர்ந் தாவதுண் டோசொல்லு வாணுதலே. 306

தயங்குநல் லாடக வில்லான் கமலையந் தண்ணகரில்
வயங்குநம் வீதி விடங்கர்தந் தோளிலென் மாமுலையான்
முயங்கு நினைவின் முதிர்ந்தே னிமித்த முருகற்சுமந்
தியங்குமொர் நோன்மை யலைத்த லினிதுகொ லேந்திழையே. 307

கழற்கா றொழுமெய் யடியரை வானவர் கண்டுவந்து
தொழற்கா தரவுசெய் யாரூர ராகத் துணைமுலையாம்
புழற்கா லரவிந்தங் கூடாது நெஞ்சம் புழுங்கியவிழ்
குழற்காடு வந்தலை யுண்பதென் னோசொல்லு கோல்வளையே. 308

குத்திரத் திற்கிட மாம்புர மூன்றெரி கூடவொரு
வத்திர மாவரி கொண்ட கமலை யரனைத்தராள்
சத்திர மாவவிர் மாமதி கொண்டவன் றாக்கியபூம்
பத்திரக் காடு கொணர்ந்தா ளனையென்ன பாதகமே. 309

மிலைக்கின்ற வெண்மதி யாரூரர் வீதி விடங்கரொடு
மலைக்கின்ற வீரன் மதன்கணை வந்ததென் வலியநன்னாள்
குலைக்கின் றதனை நினைக்கின் றிலைநங் குமரனுண்மை
யலைக்கின் றனையித னாலெவ னாவதெம் மாயிழையே. 310

பின்னை தலைவன்கட் டாமரை நாளும் பிறங்குபதத்
தென்னை யெழில்வள ராரூர்ப் பிரான்புயத் தேய்ந்ததண்டார்
தன்னை யருளென் றிரக்க வனேகந் தவமியற்று
மன்னை யுவமை யலைக்கின்ற தன்மை யறிந்திலனே. 311

மெய்மனை யாதி விழையா துறுதவ மிக்கவர்க
டம்மனை மன்னு கமலையின் மேவிய தற்பரனை
யிம்மனை யிற்கொடு வாவெனக் கூறி யிரக்கவன்னோ
யம்மனை கொல்குமை யென்றுநின் றாயென் னறைகுவதே. 312

நீறுதம் மேனிகொ ணித்தர்தென் கூட னிமலர்சென்னி
யேறுதண் ணீரின ராரூர்த் தியாக ரெழில்கொள்செந்தே
னூறுதண் டாரினை வேட்டிளைத் தேனிந்த வோங்கலென்னான்
சோறுத ணீரட வந்தனிர் கந்தர்முன் றோகையரே. 313

ஏற்றைக் கொடியி னமைத்தோன் சிவானந்த மென்னுமொரு
வாற்றைச் செறிபவ ராரூர்த் தியாகர்செய் யாசையென்னுங்
கூற்றைக் கடியுமி னென்றுரைத் தாளெங் குமரருக்குச்
சாற்றைப் புரிந்துதண் ணீர்கொடு வந்ததென் றையலரே. 314

பிச்சை புகுந்து தவமுனி மாதர்க்குப் பேசரிதா
மிச்சை புரிந்தவ ராரூர்த் தியாகர்நன் றிங்கருளார்
பொச்சை யிதனின் முருகற்குப் பூசை புரிந்துகொன்னே
செச்சை முடித்து வரநினைந் தாளன்னை செய்வதென்னே. 315

மடிப்புப் புலியதள் கொள்வா ரடியர் வணங்குமின்ப
நடிப்புள் ளவரெங்க ளாரூர்த் தியாகர் நயந்தணிந்த
கடிப்பொன் னிதழ்ச்செங் கழுநீ ரருளெனக் கண்ணிவெள்ளை
முடிப்ப னெனவன்னை வந்தனள் யானென் மொழிகுவதே. 316

அள்ள லடிய ருறாவகை சென்றுநன் றாண்டருளும்
வள்ளல் கமலையெம் மானருண் மையலிம் மால்வரையி
னுள்ள லரைத்தர வொவ்வாப் பசலையை யுற்றனனேற்
றுள்ள லடியென வன்னையென் னுற்றன டுள்ளலையே. 317

மஞ்ச மலையுறழ் மாளிகை சூழ்ந்தொளிர் வண்கமலை
யஞ்ச நடனம் புரிகரு ணாநிதிக் காங்கழுநீர்
நெஞ்சு கவர்தர நித்திரை யின்றி நெடிதலந்தேன்
றஞ்ச மெனவெறி வீயுற வந்ததென் றாயிவளே. 318

பன்மை தவிர வொருமை யுடனினை பத்தருக்கு
நன்மை யருடிரு வாரூர்த் தியாகர் நயந்துதந்த
பொன்மை யொழிய நினையாய் குகனைப் பொறுப்பதென்னச்
சொன்மை யழிய நினைத்தல் பொருண்மைகொ றூமொழியே. 319

வட்கார் புரமெரி மேவ நகைபுரி வள்ளல்பொங்கர்
கொட்கா ரளித்திரு வாரூர்ப் பிரான்றனைக் கூடலென்னுங்
கட்காதல் கொண்டமை கண்டனண் மாரன் கடிதுவரு
மட்காடு மொய்க்க வொழியுங்கொ லோவுரை யொண்டொடியே. 320

ஏடகங் கொண்ட கழுநீர்க் கமலை யிறையென்னெஞ்சைப்
பேடகங் கொண்டவிர் பெற்றிகொண் டாயிலை பேதையென்னோ
சூடகங் கொண்டகை வள்ளிதன் கேளைத் தொழுதுகொன்னே
யாடகங் கொண்டங்கு வந்தனை மாய்க்கநன் றாயிழையே. 321

காதாடு குண்டலக் கண்ணுதல் சீருடன் காளியொடு
வாதா டியவள்ள லாரூர்ப் பிரான்புய மால்வரையின்
மீதோ டியகழு நீர்கொண ராயிந்த வெற்பிடையிப்
போதாடு பூண்முலை யாய்கொணர்ந் தாயென் புகலுகவே. 322

விரிக்கின்ற வாளொளி மென்சுதை மாடத்தின் மேக்கியன்மா
றரிக்கின்ற சீர்வள ராரூரர் மாலென் றகையையெல்லாம்
பிரிக்கின் றமையறி யாய்கெடு வாய்குறப் பெண்கொழுநற்
பரிக்கின் றமைகொல நீயறி வாய்நன்று பைந்தொடியே. 323

மரைப்போ தலர்பொய்கை மல்குங் கமலை வளநகரி
லிரைப்போ தனிலளிச் செங்கழு நீரணி யீசர்க்கென்மா
லுரைப்போ ரிலர்துடி யார்ப்பச்செல் வேளை யுவந்துபராய்
வரைப்போ தகரை வதைப்போ ருளர்மதி வாணுதலே. 324

படிபுக ழும்வள மல்குங் கமலைப் பதியிலென்றுந்
துடியிடை யாளுடன் வாழுந் தியாகர்பொற் றோண்மிசைவேய்
கடிகம ழுஞ்செங் கழுநீர் நறிதெனக் கட்டுரைக்க
வடிதக ரென்ன வருவதென் னன்னைசொல் லாயிழையே. 325

வண்மை திகழ்வயல் மன்னுங் கமலை வரதரிடம்
பெண்மை திகழ்பவர் தந்திரு மார்பைப் பெரிதுமவாய்க்
கண்மை கரையக் கலுழ்கின் றமையன்னை கண்டிலள்வெற்
பொண்மை யழிக்க நினைக்கின் றனளென்னை யொண்டொடியே. 326

ஆனையி னீருரி போர்த்துப் புலியி னதளரையிற்
றானையிற் றற்றரு ளாரூரர்த் தந்திலை தையல்விண்ணோர்
சேனையி னாற்குத் திருச்சாத் தினைச்செய்திச் சீர்வரைவாய்
மோனையி லூமையை மாய்த்தா லெதுகையின் முற்றுவதே. 327

பண்டா லிலைத்துயில் பண்ணவ னெஞ்சிற் பரிந்தமர்ந்த
தண்டா மரையன்ன மாரூர்ப் பிரான்புயஞ் சார்தலின்றி
கண்டா ரிகழப் பசந்தவென் மேனியைக் கண்டனள்வெ
குண்டா டலையென நின்றாளென் னன்னையென் கூறுவதே. 328

வார சரோருக மாதிய தாட்கிட்டு வாழ்த்தவல்ல
சீரச னம்பணி யாரூர்த் தியாகரைச் சேருகிலே
னீரச னந்தவிர்ந் தாகமெய்த் தேனென நெஞ்சிற்கொளாய்
பாரச மாள நினைக்கின் றனையென்னை பைந்தொடியே. 329

மன்றா டியவிறை வாஞ்சிய நாகை மகிழ்ந்துறைவோன்
மென்றா தவிழ்பொழி லாரூர்ப் பிரான்புய மேவிமிக்க
கன்றாடை சோரக் கலங்குகின் றேனிக் கடிவரைவாய்ச்
சென்றா டடியென நின்றா ளனையென்ன செப்புவதே. 330

மேகசஞ் சார மிகுமெழின் மாளிகை மீமிசைப்பொன்
னாகசங் கீத முழங்குங் கமலைநம் நம்பர்தந்த
மோகசந் தாப மொழிப்பா யெனவிந்த மொய்வரைவா
யேகசம் போக நினைப்பா யனையென் னியம்புவதே. 331

மிக்கார் புகழ்திரு வாரூரெம் வீதி விடங்கர்தந்த
வக்கா தலுக்குறு சூருர மாய்த்த வவிரிலைவேற்
கைக்காளை மின்னுமிவ் வெற்பிடைக் காவிக் கருவிழியா
யிக்காடை யோபிணை பட்டது சால வியம்பினன்றே. 332

மண்டலம் பண்டுண்ட மாயவன் பூசை மகிழ்ந்துகொண்ட
விண்டலஞ் சூழுந்தென் னாரூர்த் தியாகரை மேவவுன்னி
வண்டலை நீக்கிய வென்பொருட் டாகத்தி வாகரன்சொல்
கொண்டலிற் பின்னது வந்தெவ னாவது கூறனையே. 333

விண்ணாட் டரச னுறுதுயர் நீக்கியோர் வேந்தனிந்த
மண்ணாட் டினிலுய ராரூரில் வைத்து வணங்குதெய்வ
முண்ணாட்டி வேதை யுறுவேனி தற்கிந்த வோங்கல்வெற்பின்
கண்ணாட் டினையுற்று நிற்பதென் னேசொல்லு காரிகையே. 334

அருவ னுருவ னருவுரு வாகி யமர்ந்தருளு
மொருவ னிருவர் பணியுங் கமலை யுறையரன்றார்
தருவ னெனவுரை வென்றழற் கீவது தையல்கொண்டு
வருவ னெனவுரை யேலத னாலென் வருவதுவே. 335

கோடலை செல்வய லாரூர ரையன்பர் கூடிநின்று
தாடலை யாற்றொழ வாடும் பிரானைத் தருவலினி
வாடலை யென்னநல் வாயில ரன்னையர் வல்லையிவ
ணாடலை யென்னும்வெவ் வாயினர் சால வணுகினரே. 336

நள்ளாற்றி னுந்திரு வாய்மூ ரினுமுறை நாதரென்றுந்
தள்ளாப் புகழ்த்திரு வாரூர ரென்னகந் தம்மகமாய்க்
கொள்ளாப் பசலையைச் சாலவு மீந்த கொடியவிந்த
வெள்ளாட்டை மாயெனும் வாணிய ராயின ரென்னமரே. 337

பணியார் பணிகொண்ட பண்ணவர் கோனம் பரனடியார்க்
கணியா யமுதமு மானோன் கமலை யரனருளுந்
தணியாப் பசலை தவிருங்கொல் வேண்மலர்த் தாள்பரவி
மணியாட் டினையின்று நீயழித் தாலன்னை வாய்மலரே. 338

முடையாக் கையினுறு மாசையை நீக்கி முடிவிலன்பு
படையாத் தொழுபவர் சூழ்தென் கமலைப் பதிப்பதித்தோட்
டொடையாற் பெரிதுந் துயருற் றனனெனத் துங்கவிவ்வெற்
பிடையாட் டினைப்பிடித் தென்னைகொ லாமன்னை யெய்துவதே. 339

எண்ணிற் படாத புகழ்சேர் கமலையெம் மீசர்விண்ணோர்
விண்ணிற் படாவகை நஞ்சமு தாக்கிய வேந்தரிந்த
மண்ணிற் படாதவெங் காமந் தரவன்னை மங்கையர்கள்
கண்ணிற் படாமை வதைக்கலுற் றாளென்ன காரணமே. 340

பண்ணார் மொழிமங்கை பாகன் கமலைப் பதியெம்பிரான்
றண்ணார் தருசெங் கழுநீர்த் தொடையலைத் தையனெஞ்சு
கண்ணா திருக்கு மருந்தொன்று தாவண் கடற்கமல
முண்ணாமை நீவிடு வில்லையுன் போலெனக் குற்றவரே. 341

தோய முறாவொளிர் வேணியர் சூழ்பெருந் தொண்டர்சென்ம
மாய முறாவகை செய்யுங் கமலை வரதர்செய்மா
லேய முறாத வருள்புரி வாயெனி லேந்திழையா
காய முறாமை யடிப்ப தொழியிது கைதவமே. 342

இருளார் கருங்குழ லேந்திழை பாக மியைந்தடியார்
தெருளால் வணங்கக் கமலையின் மேவு தியாகர்தந்தா
ரருளா மையினல ருற்றேன் மகளிர்கண் ணாரளக
மருளாமை யன்னை வதைக்கலுற் றாளன்று வாணுதலே. 343

தேவார முந்திரு வாசக முஞ்செறி தென்கமலைச்
சேவார் கொடியினர் திண்புய மீதொளிர் செங்கழுநீர்
தாவா வெனச்சொல்ல பாவாய் தராயென் றடக்கரைவாய்
பூவாத செச்சை யறுப்பாய் முருகன்முன் புந்திசெய்தே. 344

முளிக்கின்ற வெண்டயிர் வெண்ணெயின் மாயன் முளரியங்கட்
கொளிக்கின்ற தாண்மல ராரூர்ப் பிரான்புய வோங்கன்மதுத்
துளிக்கின்ற தாரரு ளாமைக்குத் தீவினைத் தூக்கிநன்று
களிக்கின்ற மையழிப் பானன்னை யெண்ணினள் காதலித்தே. 345

போதியல் பூம்பொழி லாரூரின் மேவிய புண்ணியர்தந்
தாதியல் செங்கழு நீர்தரு வாயித் தடவரைவாய்க்
கோதிய லாத குறக்கோ மளம்புணர் கொற்றவற்கிவ்
வாதியி லாமை யரிய லரியன்மன் னம்மனையே. 346

தீராச் செழுவள மல்குங் கமலைத் திருநகர்வாய்ப்
பேராத் திருவரு ளோடுறை யண்ணல் பெருந்தடந்தோள்
சேராப் பெருமய லாலே யனங்கன் செயிர்த்தெதிர்ந்த
போராட் டினையடப் போவதெவ் வாறுசொல் பொற்றொடியே. 347

தொழலாற் றகைபெறு தூயோர் பவத்தின் றொகையையெல்லாம்
விழலாக் கியபுக ழாரூர்ப் பிரான்புய மேவிநெஞ்ச
மழலாத் துயருறு தீவினை யேற்கிவ் வடுக்கலிற்பூங்
குழலாட் டினைக்கொண்டு வந்தெவ னாவது கூறுதியே. 348

சேலார் பழனந் திகழ்தென் மதுரைத் திருநகர்வாய்
நூலாய் புலவரெம் மாரூர ரீந்த நுவலருஞ்சீர்
மாலான் மருளு மெனக்காக விந்த மழைதவழ்கற்
பாலாடை யோசிதை வுற்றிட வேண்டுங்கொல் பாவைசொல்லே. 349

மலையார்ப் புறுதிருக் கோபுர மன்னிய வண்கமலைச்
சிலையாற் சிலைவளை தேவர் பிரான்புயஞ் சேருமையல்
வலையாற் றுவக்குண்ண மாற்றுமென் றோமணி வாளொளிர்பூண்
முலையாட் டினைக்கொண்டு நீவந் தனையிம் முருகன்முன்னே. 350

அடியார்க் கருள்புரி யண்ணல் கமலை யமரர்பெம்மான்
படியாற் பொலிபெருந் தேரேறி தோளிற் பரிந்தணிந்த
கடியாற் றிகழ்செங் கழுநீர்க் கடுமயல் காணவெற்பிற்
றொடியாற் றொடுவந் தனையே யிதனையென் சொல்லுவனே. 351

இழையாப் பணியை யணிவோ ருயிர்க்குயி ரென்றுமரீஇ,
மழையாப் பொழியரு ளாரூர்ப் பிரான்புய மாலையுறாப்
பிழையாற் றுயரிற் பெரிதுறை வேற்குப் பிறங்குகனங்
குழையாட் டினைக்கொண்டு நின்றனை யென்னைகொல் கூறுதியே. 352

வெவ்வா ரணமுரி யாரூரர் வீதி விடங்கரிங்கியா
னுய்வா னறுஞ்செங் கழுநீ ரளித்தில ரொப்பரிய
பைவா ளரவல்குல் வள்ளி மனோகரற் பாடிநடு
சவ்வார மன்னை கொணர்ந்தறுப் பானன்று சார்ந்தனளே. 353

சிந்தா மணியடி யார்கட்கெல் லாநறுந் தேன்றுளிக்குஞ்
செந்தா தவிழ்பொழி லாரூர்த் தியாகர் திருவருளைத்
தந்தா தரிக்கும் வகைதேடு வீர்கருந் தார்க்குழலீ
ரைந்தா முயிருறு தண்ணீர் கொணர்ந்திங் கணுகன்மின்னே. 354

கந்தத் திருமலர்க் கண்ணிட்டு வாழ்த்திய கார்நிறக்கோ
விந்தற் கொருவளை தந்த கமலை விமலரிங்கு
வந்தப் புரிவளை தாரா ததனுக்கிம் மால்வரைவா
யந்தத் தயலி லசனத் தினையழித் தாவதென்னே. 355

அஃகா வளந்திக ழாரூரர் தோளி னணிகுவளை
வெஃகா வுறுதுயர் கொண்டுறை வேற்கிவ் விலங்கலின்வா
யெஃகார் கரக்குகன் சந்நிதி வந்ததை யீந்துநின்ற
மஃகானை மாய்க்க நினைப்பதெ னன்னை வகுத்துரையே. 356

வயனத் திலகுதென் னாரூர்ப் பிரானையென் மாமலர்மென்
சயனத் திடையழைக் கின்றிலை. வேலையிற் சார்ந்தயமுண்
புயனத் தியகுழல் வள்ளிதன் கொண்கன் புகுந்தகடை
யயனத் தவிரய னத்தையென் னன்னை யறுப்பதுவே. 357

ஆன்றார் புகழ்தென் கமலையில் வாழெங்க ளண்ணல்புயத்
தேன்றாழ் தருசெங் குவளை தராயன்னை தேமலர்தூய்
வான்றாழ் முருகன் மலரடி வாழ்த்தியிம் மால்வரைவாய்
மூன்றா மெழுத்தி லசரங் கொலநன்று முன்னினையே. 358

கல்லா தவர்மனஞ் செல்லார் கமலைக் கடிநகர்வாய்
வில்லா ளுதன்மங்கை பாகர்தந் தாரை விரும்புமுன்பு
பொல்லாத சூருரம் வென்றவில் வேலன்முன் புக்குமுத
லில்லாத பாதகர் வந்தூ தியமென்ன வேந்திழையே. 359

மடையில் வளைமுத் திவர்செய்க் கமலையெம் வள்ளல்விழிப்
புடையி லகப்பட மாட்டேன் பொருட்டிந்த பொன்வரையி
னிடையின் முருக னிணையடி யேத்தி யெழின்மலர்தூய்க்
கடையி னயலி லசடம் புகுந்தது காரிகையே. 360

கலயம் புரைமனத் தாருக்கெட் டாத கடவுளூறு
மலயந் திகழ்முனி சூழ்தென் கமலையெம் மான்புயத்தி
னிலயஞ் செயுமனத் தென்பொருட் டாக வெரிபரக்கும்
வலயந் தனைக்கொடு வந்தனை கொல்வதென் மாயமிதே. 361

ஓதி யடங்கு மனத்தார்க் கருளு மொருவனெழிற்
பாதி மதிய மணிவோ னருளைப் பரியெனது
நீதி யறிகிலை நேரிழையா யிந்த நீள்சிலம்பி
னாதி யயலி லவசத் தினைக்கொன்றென் னாவதுவே. 362

வென்றார் புரங்கடென் னாரூரர் வீதி விடங்கர்புயக்
குன்றா தரித்து மயங்குமென் கொள்கை குறிக்ககிலாய்
மென்றா ரணிகுழல் வள்ளிதன் கோனை விழைந்தெடுத்து
நன்றா லயத்தை யழிக்கலுற் றாயன்னை நன்றல்லவே. 363

வாவும் புரவியோ ரேழையும் பொற்பொரு வாயிற்கொடி
யேவுங் கமலைத் தியாகர்தந் தாரினை யெய்தப்பெற்றேன்
பாவுங் கொடிய மயலின் வளனெனும் பண்பறியாள்
மேவுந் துறுவை யழிக்கலுற் றாளன்னை மிக்கெழுந்தே. 364

இயந்தான் கடலி னதிருங் கமலை யிறைவனுறு
புயந்தா ழிதயந் திரும்பா தழுந்துதல் புந்திசெய்யாள்
குயந்தாழ் கொடியன வள்ளிபின் சென்ற குரிசின்முன்னர்
பயந்தாள் மகண்மையி னீற்றை யடவென் பரிவதுவே. 365

பின்னை கணவன் பணிதென் கமலைப் பிரானென்னெஞ்சந்
தன்னை மயக்கிய தன்மை யறிகிலள் சாகரத்தின்
மின்னை யுறுமயில் வீரன்முன் சென்று விரைமலர்தூய்
அன்னை யகத்துறு வெள்ளையை மாய்த்த லறிவதன்றே. 366

ஏர்க்காற் றுணையைப் பரவா தவருக் கிரங்ககிலாச்
சீர்க்கார்க் களத்தின ராரூர ரென்றிச் செழுவரைவாய்
நாக்காற் புகன்று வளையுடை சோர நலியுமிந்த
நோக்காட் டினைவதைத் தென்னைகொல் லோபய னுண்ணிடையே. 367

அரியா சனத்தி லிருந்தே யுலகமு மாரவருள்
சொரியா விலகுமென் னாரூரர் தாள்களைத் தோயவகை
தெரியா வழுங்குகின் றேன்றிறத் தேவிறற் சேயினுக்குப்
பரியாமை வந்து பயனுள தோசொல்லு பைந்தொடியே. 368

புற்றுக்குள் வாழரப் பூண்டோர் கமலைப் புனிதரென்மேற்
சற்றுத் தயாசெய்து வாரா திருப்பவிச் சாரலிற்பூக்
குற்றுச்செவ் வேளடிக் கிட்டுத் துணங்கையங் கூத்தியற்றி
யெற்றுக்கன் னாயிந்தப் பாராட்டை யுற்றட வெண்ணுவதே. 369

கொவ்வை யிதழியை வாமத்தில் வைத்தவெங் கோனெதிர்த்த
தெவ்வை நகைத்ததென் னாரூர்ப் பிரான்புயஞ் சேரலின்றி
வெவ்வை மலர்க்கணை பட்டகஞ் சால மெலியுமிப்போ
தவ்வை விரைந்தனை சீராட்டை யுற்றென்னை யாவதுவே. 370

ஞானசம் பந்தர் முதன்மூவர் செய்கவி நல்லமிர்த
பானசந் தோடத்த ராரூரர் தோள்களைப் பார்த்ததனா
லானசந் தாபத் தழுங்குகின் றேன்முன் னகமகிழ்ந்து
தானசம் போக நினைத்தா ளனையென்ன சாற்றுவதே. 371

மன்னா வுலகத் தவாவினை நீக்கி மனமகிழ்ந்து
தன்னாண் மலரடி தாழடி யார்துயர்ச் சாகரந்தீர்
பன்னா வலர்புக ழாரூர்ப் பிரானைப் பரியச்சென்ற
நன்னா ணயத்தைக் கெடுத்தால் வருங்கொ னறுநுதலே. 372

ஏர்ப்பா னிறத்தின ராரூரில் வாழுமெம் மீசர்புயத்
தார்ப்பா லழுந்திய நெஞ்சின ளாகித் தவிக்குமென்னைச்
சீர்ப்பான் மொழியன்னை வெய்துயிர்த் துக்கண் சிவந்தெனுற்றுப்
பார்ப்பா ளயத்தை யழிப்பாள் விரைந்திப் பருப்பதத்தே. 373

ஆராய வல்லவர் சூழ்தென் கமலை யரனைமரீஇ
மாராய மெய்தும் வகையறி யாதுநல் வண்டலிட்டுக்
கூராய முந்துறந் தேன்பொருட் டாதி குறுகுவது
சாராய மிங்கு வரவேண் டுவதென்ன தாழ்குழலே. 374

தேராக விந்தச் செகதலத் தேறித் திரிபுரத்திற்
காராக மாலம்பெய் வீர னிலங்கு கமலைதனை
யூராக மேவு மொருவன் பவழ முறழ்ந்தொளிரு
மோராக மேவவின் றஞ்சாக மாள்வதென் னொண்ணுதலே. 375

இட்டசண் டீசர்க் கருளுங் கமலை யிறைவரையான்
பெட்டசந் தாபந் தவிரா யெனநன்று பேசவன்னை
மட்டசம் பீர முலைவள்ளி கேளின்முன் வந்துமதி
கெட்டசம் போக நினைப்பா யினியென் கிளப்பதுவே. 376

நன்னா வலர்புக ழாரூரின் மேவிய நாதனெழிற்
பொன்னார் வரைப்புயம் புல்லவொல் லாமற் புலம்புகின்ற
வென்னா தரவை யொழிக்கறி யாயுய ரிவ்வரைவா
யன்னா வமைவி னடுவைக் குறைக்க வறிவைநன்றே. 377

அறிவ லெனுங்கிரிக் கெட்டா வடியிணை யாரளியிற்
பிறிவல் லவர்க்கரு ளாரூரர் தோளிற் பிறங்குகின்ற
வெறிவல் லிணர்க்கொன்றை மேவினன் யானென விள்ளவிள்ள
வெறிவல் லயத்தை யெனநின் றனையன்னை யென்சொல்வதே. 378

பரியா மறைகளைச் செய்தோன் கமலைப் பதியிலென்று
மரியார் தொழவுறை யண்ணறன் றாரளித் தாதரியாய்
பொரியார் மலர்பல தூவி முருகன்முன் புக்கிவ்வயிற்
பிரியா ... ... ... ... டாவன்னை பேசுகவே. 379

மலயத் துவச னெனமது ராபதி வைகியிக்கு
வலயத் தரசுசெய் யாரூரர் மேரு வளைத்தபுயத்
திலயித்த நெஞ்சினை மீட்டுத் தருதி யெனையளித்தாய்
நிலயத் தினையழித் தாவதெ னீங்கு நிகழ்த்துதியே. 380

காரேய் களத்தின ராரூரிற் றேவர கண்டர்நறுந்
தாரே யகமொன்று தாவென் றிரப்பவிச் சாரலிடை
யோரே முலகமும் வாழ்த்து முருகன்மு னுற்றெனன்னை
யீரே ழகமென நின்றனை யானென் னியம்புவதே. 381

பரையி னுருவைத்தன் பாகத்தி னாக்கிய பண்பர்வளை
கரையி னுறுமுத் துயிர்க்குங் கமலையர் காவலர்தம்
புரையி னறுஞ்செங் கழுநீரை யன்னை புரிந்திலரேல்
வரையி னுரிமையி னீற்றினை மாய்த்தென் வருவதுவே. 382

மடலாற் றிகழ்கழு நீரன் கமலை வரதனென்னை
விடலாற் பெரிது மெலிகின் றனனென மேவுகிலா
ளடலாற் பொலியயில் வேலோன்மு னன்னையென் னாதரித்து
கடலாற் றினைதுணிந் தொப்பரி தாங்களி காட்டுவதே. 383

காயுங் கதிர்த்திரி சூலத்தர் மன்னுங் கமலையர்கோன்
வேயுங் குவளையை நல்காமை கண்டிலை மெல்லியலா
யாயும் புலமை முருகன்முன் சென்றனை யாதரித்து
நீயுந்தி யாட்டினைக் கொண்டுநின் றாயென் னிகழ்த்துதியே. 384

குன்றா வளமலி யாரூரின் மன்னுமெங் கோனயந்து
கன்றாடை தந்து கலவா திருப்பக் கனங்குழையாய்
நன்றாடல் வேலணி யொண்கை முருகனை நாடிக்கொன்னே
சென்றா டடியென நின்றா ளனையென்ன செப்புவதே. 385

அரியயர் காண வரியார் கமலைய ரார்புயத்திற்
றரியலர் தாவெனத் தாழ்வரை வாயன்னை சண்முகற்குப்
பொரியலர் தூவுவள் புட்டகஞ் சாத்துவள் பூசைசெய்வள்
பரியசம் போக நினைப்பா ளிவளைப் பகர்வதென்னே. 386

பொன்னார் திருமதிள் சூழ்தென் கமலைப் புரத்துறையு
மென்னா யகர்தங் கழுநீர்த் தெரியலை யீந்தருள
வுன்னா திருப்பவிவ் வோங்கலின் வேலனை யும்மழைப்பா
யன்னாயெங் கோன்மை யழிக்கலுற் றாய்நன் றறைகுவையே. 387

கற்புறு மங்கையோர் பங்கின னெங்கள் கமலையின்வாழ்
சிற்பர னீந்தவிம் மையலை நீக்குமோர் சிந்தையிலா
யற்புத மற்புத மென்னுரைப் பேனிங்க ளன்னையிந்த
வெற்புறு பொன்மை யடிப்பான் விரைதி விருப்பமுற்றே. 388

வாரகந் தாழும் வனமுலை யாயொரு வாசகங்கே
ணீரகந் தாழும் பணைசூழ் கமலை நிலவணிந்தோன்
சீரகந் தாவென வெந்தயங் காயத்தைத் தீர்த்தனையிவ்
வேரகந் தாழு முருகனை நாட விசைந்தனளே. 389

நிலையாத் தனிமுத லாயின யாவு நிலையினவென்
றலையாத் திருவினர் சூழ்தென் கமலை யரன்றருமால்
வலையாற் றுவக்குண் மதியற்கு நீர்வளர் மாமணியே
கலையாட் டினையுற்று வந்தெவ னாவது கட்டுரையே. 390

ஆராத் திருவரு ளாரூரன் பேரவை யானருளிப்
பாராக் கொடுமையி னாலேங்கி வாடுமென் பண்பறியாள்
பேராற் பொலியயில் வேலோற்குப் பூசை புரிந்திமலைச்
சீராட் டினையழிப் பாள்மிக வன்னைகொ றேமொழியே. 391

செய்யசம் பீர விரதங்கொண் டாட்டிய சீரியர்தம்
வெய்யசந் தாபந் தணிப்போன் கமலை வியனகரிற்
பைய்யசெம் பாதம் பணிந்தா ளருள்வரப் பார்குளகு
துய்யசம் போக நினையே லனைநன்று சொல்லினளே. 392

விச்சா தரர்க ளியக்க ருரகர் மிடைந்துதலை
வைச்சா தரஞ்செய் யடியார் கமலையெம் மானரவக்
கச்சார் தருமய றீருங் கொலோவயிற் காளையுய்க்கு
நச்சாக மீங்குயிர் மாண்டா லுரைசெய்வை நன்னுதலே. 393

வாழ்கசெல் வத்திரு வாரூர் மனுமுறை மாமறையோர்
வாழ்க தியாகர் வினோதர்கொள் பூசை வளங்கள்பயிர்
வாழ்கவைஞ் ஞூறுகொத் தாந்திருக் கூட்டங்கள் வாழ்கவென்றும்
வாழ்கமெய் வாய்மை யழியாத வித்துறை வாழ்கவென்றே. 394

**இந்நூலைப் பற்றி...**

தமிழர்கள் வாழ்வை அகவாழ்வு என்றும், புறவாழ்வு என்றும் இரண்டாகப் பகுத்துக் கொண்டார்கள். அதில் அக வாழ்வு என்பது ஒருவனுக்கும், ஒருத்திக்குமான மன உணர்வின் அடிப்படையில் ஆனது. அந்த உணர்வுகளை முழுமையாகச் சொல்லும் இலக்கியமே கோவை இலக்கியம் ஆகும்.

துறை என்பது நிகழ்ச்சியைப் பகுக்கும் ஒரு சிறு கருவி எனலாம். கோவை இலக்கியங்களில் துறைப் பகுப்பு, பாடலின் பொருளைத் தெளிவாக்குவதாகவே அமையும்.

ஒரு துறைக் கோவை என்பது அகவாழ்வின் ஒரு நிகழ்ச்சியை 400 பாடல்களால் சொல்வதாகும். இத்தொகுப் பில் தலைவியின் கூந்தலில் மொய்க்கும் வண்டை ஓட்டுவது போலத் தலைவன் நெருங்குதல் என்ற செய்தி அமைந்த ஒரு துறைக் கோவை ஒன்றும், வெறியாட்டு என்ற நிகழ்ச்சியைத் தடுப்பது என்னும் செய்தி அமைந்த ஒரு துறைக் கோவை ஒன்றும் ஆக இரண்டு ஒரு துறைக் கோவை நூல்கள் உள்ளன.

இவ்விரண்டு நூல்களும் ஓலைச் சுவடியிலிருந்து முதன்முதலாக வெளிவருகின்றன. தமிழ்க் கவிஞர்களின் விரிவான மொழி ஆற்றலுக்கும், கற்பனை வளத்துக்கும் ஒரு துறைக் கோவை நூல்கள் உச்சமானவை எனக் கருதலாம்.

**ஞா மேகலா**
பதிப்பாசிரியர், நூலகப் புலவர்
டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம்